# கல்கி

## சந்திரசேகர் பாதயாத்திரை

KALKI 6-2-83 ரூ 1.20



# "காம்ப்ளான்® ஒண்ணுதான் சரி என் குடும்பத்துக்கு ...திட்டமிட்ட பரிபூரண உணவு."



"பல வேளைகள்
சாப்பிடத் தவறி விடும்
என் கணவருக்கு"



"சாப்பிடும்போது
சண்டித்தனம் செய்யும்
என் மகனுக்கு"



"நோயுடல் தேறிவரும்
என் தாயாருக்கு"

## காம்ப்ளான்® ஒன்றுதான் எவருக்கும் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களால் முழுமை பெற்றது.

காம்ப்ளான் ஒன்றுதான் திட்டமிட்ட விஞ்ஞானக் கலவையாக உடலுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களை அளிக்கிறது: புரதங்கள், கார்போ-ஹைட்ரேட், கொழுப்புச் சத்து, வைட்டமின்கள், உலோக தாதுக்கள். எனவேதான், டாக்டர்கள் பெரும்-பாலும் சிபாரிசு செய்யும் ஆரோக்கிய பானமாக விளங்குகிறது காம்ப்ளான்.

கிடைப்பவை நால்வகை: இன்சுவை ரகங்களாக — சாக்கலேட் காம்ப்ளான், ஏலக்காய்-குங்குமப்பூ காம்ப்ளான், ஸ்ட்ராபெர்ரி காம்ப்ளான், தவிர சாதா காம்ப்ளான்.

"அசதியினால்
சரிவர
சாப்பிட
முடியாத
எனக்கு"




## திட்டமிட்ட பரிபூரண உணவு காம்ப்ளான்®

GLC. 10-2015 TM

# கல்மேல் எழுத்து!

ஒருவன்:
கலைத்தெழுதும்
கரும்பலகை
எழுத்தான வாழ்க்கை
கல்மேல் எழுத்தாவது
எப்போது தோழா?

மற்றொருவன்:
உன்
தோள் சுமக்கும்
கலசத்தில் கசிகின்ற
அமுதத்தில்
துளியேனும் பிறர்க்கு ஈந்து பார்,
உன் வாழ்க்கை
கல்மேல் எழுத்தாகும் தோழா!

உன்
உயிர்ப்பு நெடுமரத்தின்
உறவு நிழல் பரப்பில்
ஒருவனேனும்
இளைப்பாற இடம் தந்து பார்,
உன் வாழ்க்கை
கல்மேல் எழுத்தாகும் தோழா!

உன்
பயணப் பழக்காட்டில்
பறிக்கும் பழக்குலையில்
பசித்தவனுக்கு
ஒன்றேனும் தந்து பார்,
உன் வாழ்க்கைக்
கல்மேல் எழுத்தாகும் தோழா!

உன்
குருதிப் புனல் பெருக்கில்
குதிக்கும் மனப் பரப்பில்
உழைப்பின்
வியர்வைத் துளிகளைக்
கலந்துபார்,
உன் வாழ்க்கை கல்மேல் எழுத்தாகும்
தோழா!

கா. வில்லவன்





# பா[ர]த யாத்திரையில் ஒரு நாள்

"நாங்களே இந்தப் பாதயாத்திரை இவ்வளவு வரவேற்புப் பெறும் என்று நினைக்கவில்லை. 'வேறு வேலையில்லாமல் இப்படி ஆரம்பித்திருக்கிறார்கள்' என்று கேலி செய்வார்கள் என்றுதான் பயந்தோம். நல்லவேளை எங்களையும், எங்கள் தலைவரையும் மக்கள் சரியாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள்'' என்றார் தமிழக ஜனதா கட்சி தலைவர் திரு இஸ்மாயில். சாமானியர் சரியாகப் புரிந்து கொண்டிருந்தாலும் உயர் மட்டத்தில் சிலர் கிண்டலாகப் பேசத்தான் செய்கிறார்கள்.

''இது என்ன வேலையத்த வேலை? இதனால் என்ன சாதித்துவிட முடியும் என்று நினைக்கிறார்?'' என்று கேட்கும் இவர்களுக்கு சந்திரசேகரே பதிலளிக்கிறார்:

''இது பாத யாத்திரை இல்லை. பாரத யாத்திரை. இப்படி நடந்து மக்களை ஏமாற்றி அரசியலில் வெற்றிபெற இதை நடத்தவில்லை நான். மக்கள்தான் உண்மையான சக்தி. தலைவன் என்பவன் இதைப் புரிந்துகொள்ள வேண்டும். ஏழைகளிடம் பிறந்து வளர்ந்து தலைவனானால் அவனால் நன்றாக ஆட்சியின் போக்கை அமைக்க முடியும். அப்படி இல்லாமல் செல்வத்தில் பிறந்து வரும் தலைவன் கூட சுயத் தியாகங்கள், கடுமையான நியம நிஷ்டை மூலம் தன்னை அடக்கி கஷ்டம் என்ன என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். அப்போதுதான் அவனால் மக்களைப் புரிந்து கொண்டு நாட்டை நடத்த முடியும் நான் மக்களைப் புரிந்து கொள்ளவே இந்தப் பாத யாத்திரையை மேற்கொண்டு இருக்கிறேன்...''

இப்படிப் பேசும் அவரைக் கண்டு பிடிப்பதற்குள் நாங்கள் பட்ட பாடு...! கொல்லத்தில் போய் இறங்கியவுடன் அவ்வூர் காவல் நிலையத்துடன் தொடர்பு கொண்டோம். அங்கிருந்தவர்கள் கேட்ட முதல் கேள்வி, ''சந்திர சேகரா? யார் அது?''

பிறகு உள்ளூர் ஜனதா அமைப்பில் விசாரித்தோம். அங்கு ஒருவர் பத்திரிகை நிருபர்கள் என்றவுடன் உற்சாகமாக, ''அப்படியா? அவர் இப்போ மாவேலிக்கரா கிட்டப் போய்கிட்டு இருப்பார். சாயந்திரம் நாலு மணிக்கெல்லாம் புடிச்சுடலாம். கார் ஏற்பாடு பண்ணிக்கிட்டு வந்துடுங்க'' என்றார்.

''காரா.....?'' திகைப்பு எங்களுக்கு. நீங்கள் வழிகாட்டினால் உங்களுடன் பஸ்ஸில் வருகிறோம்'' என்றதுதான் தாமதம், ''என்ன சார் நீங்க? காலையிலதான் அவரைப் பார்த்துட்டு நான் வந்தேன். ரோடும் சரியில்லை. பஸ்ஸில நாம போறதுக்குள்ள அவர் பத்து மைல் நடந்துடுவார். எப்படிப் பிடிக்கிறது? தவிரவும் சரியான நேரத்துக்கு பஸ் வராது....''

பஸ் ஸ்டாண்டுக்குப் போக ஒரு ஆட்டோ பிடித்துக் கொடுத்ததுடன் கைகழுவிக்கொண்டார், தொண்டர்!





அரை குறை மலையாளத்தில் விசாரித்துக் கொண்டு மாவேலிக்கரை போய்ச் சேர்ந்தோம். 'அவர் புறப்பட்டுப் போயிருப்பாரோ?' என்று சந்தேகப்பட்டுக்கொண்டே பயணியர் விடுதிக்கு வந்தவர்களுக்கு வாசலில் கார்கள், வேன்கள் நின்றுகொண்டிருப்பதைப் பார்த்ததும்தான் நிம்மதி பிறந்தது.

உள்ளூர் பத்திரிகை நிருபர்கள் பலர் காத்துக் கொண்டிருந்தார்கள். ''என்ன விசேஷம்?'' அப்போதுதான் கர்நாடகாவிலிருந்து பங்காரப்பா வந்தாராம். உள்ளே சந்திரசேகருடன் பேசிக் கொண்டிருக்கிறாராம். நடந்து நடந்து கொப்பளித்துப் போயிருந்த கால்களுக்கு மருந்து தடவிக் கொண்டிருந்த கேரள யுவ ஜனதாவின் உப தலைவி திருமதி ரோஸ்லி பணிக்கர் இந்த விவரத்தைக் கூறினார். கொஞ்ச நேரம் கழித்து சந்திரசேகர் எல்லோரையும் உள்ளே அழைத்தார்.

பங்காரப்பாவைக் கேள்வியால் துளைத்து விட்டார்கள் நிருபர்கள். கல்கி வாசகர்கள் சார்பாகக்கேட்கப்பட்ட இரண்டு கேள்விகள்:

''நீங்கள் இப்படி அமைச்சரவையில் சேராமல் தனித்து நிற்கிறீர்களே, ஜனதா என்றாலே இப்படித்தான் ஒற்றுமை இல்லாமல் போய்விடும்; ஒன்றையும் சாதிக்காது என்பதை மீண்டும் நிரூபிப்பது போல் இருக்கிறதே!''

பங்காரப்பா இதை உறுதியாக மறுத்தார்.

''இல்லை. இந்தத் தடவை அந்த மாதிரியான அவப் பெயர் வராமல் கண்டிப்பாக நாங்கள் கவனித்துக் கொள்வோம். மீண்டும் கர்நாடகாவில் இந்திரா காங்கிரஸ் வரும் என்ற பேச்சுக்கே இடமில்லை.''

''நீங்கள் அமைச்சரவையில் சேர யோசிப்பதை வைத்துக் கொண்டு, இ. காங்கிரஸார் உங்களை அணுகவில்லையா? தங்கள் கட்சிக்கு வந்துவிடுமாறு அழைப்பு விடுக்கவில்லையா?''

இதற்கு அவர் ஒன்றுமே பதில் பேசவில்லை. மீண்டும் வற்புறுத்திக் கேட்டதற்கு ''நோ கமெண்ட்ஸ்'' என்பதுதான் பதில்.

நிருபர் கூட்டம் வடிந்த பிறகு பாத யாத்திரை தொடங்கியது. ''கன்னியாகுமரி காந்தி மண்டபத்தில் தொடங்கிய இந்த ஐம்பது வயது பிரும்மச்சாரியின் நடை ஐந்து நிமிடத்துக்கு ஐநூறு காலடிகள்'' என்று கணக்குச் சொல்கிறார் கூட வரும் பாலசுப்பிரமணியம் என்னும் தமிழ்நாட்டு இளைஞர்.

தன்னுடன் வருபவர்கள் அனைவரையும் அணைத்துச் செல்லும் பாங்கு, அவர்களுடனே உட்கார்ந்து சாப்பிடும் சமத்துவம், கூட்டங்களில் தீர்மானமான, நறுக்குத் தெறித்தாற் போன்ற பேச்சு ஆகியவற்றில் திரு சந்திரசேகரின் தனித்துவம் மிளிர்கிறது. உடன் வருவோர் நலனை அடிக்கடி கரிசனத்துடன் விசாரிக்கிறார்.

ஊர்வலத்துக்கு முன்னால் சிவகாசியைச் சேர்ந்த சபாபதி ஏர் உழவன் சின்னமாக மாறி கலப்பையை எடுத்துக் கொண்டு நடந்து செல்கிறார். அவருக்கும் முன்னால் 'சந்திர

# சந்திரசேகர்

சேகர் வருகிறார்' என்பதை மைக்கில் அறிவித்துக்கொண்டே செல்லும் ஒரு வேன். சந்திரசேகருடன் ரோஸ்னி பணிக்கர், சுநீந்திர பதோரியா (யுவ ஜனதாவின் செயலாளர்) ஹர்பஜன் சிங் (பஞ்சாப் மாநில ஜனதா தலைவர்) முன்னாள் மகாராஷ்டிர மந்திரி ஒருவர், தமிழகத்தைச் சேர்ந்த சட்டக் கல்லூரி மாணவர் பாலசுப்பிரமணியம் இன்னும் பலர் நடக்கின்றனர்.

இவர்களுக்குப் பின்னால் ஜனதா கட்சியைச் சேர்ந்த நாற்றைம்பது பேர் கோஷங்களை எழுப்பிய வண்ணம் செல்கிறார்கள். ராணுவ அணிவகுப்பைப் போல நடத்திச் செல்கிறார்கள் ஊர்வலத்தை. சந்திரசேகர் கிராமங்களுக்குள்ளே செல்வது இல்லை. நெடுஞ்சாலையில்தான் நடக்கிறார். ஆனால் தம்மைக் கடந்து செல்லும் எந்த மனிதரையும், எந்தக் காரையும், பஸ்ஸையும் விட்டு வைப்பதில்லை. எல்லாருக்கும் கை கூப்பி ஸிநேக பாவத்துடன் சிரித்தபடி வேகமாக நடக்கிறார்.

மூச்சந்தியோ, நாற்சந்தியோ வந்துவிட்டால், 'மைக்'கில் பேசுகிறார். அவருடைய ஒவ்வொரு சிற்றுரையிலும் அடிநாதமாக ஒலிப்பது இதுதான்:

''மக்களுடைய சக்தியே நாட்டின் சக்தி. உங்களுடைய பலத்தை நீங்களே புரிந்து கொள்ளாமல், எங்கோ இருக்கும் அரசாங்கம் எல்லாவற்றையும் செய்து வரும் என்று இருக்கக் கூடாது. அதே போல அரசாங்கத்தில் இருப்பவர்களும் உங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளாமல் ஏதேதோ திட்டங்களை யெல்லாம் வகுக்கக் கூடாது. இவ்விரண்டையும் இணைக்கவே நான் இந்தப் பாத யாத்திரையை மேற்கொண்டுள்ளேன்.''

தன்னைத் தலைவன் என்று தனிமைப்படுத்திக் கொள்ளாமல் மக்களோடு மக்களாகப் பழகுகிறார் சந்திரசேகர். இதனால் கவரப்பட்டுத்தான் திருவேங்கடம் தம் மில் உத்தியோகத்திலிருந்து ஆறு மாதம் சம்பளமில்லாமல் விடுப்பு வாங்கிக் கொண்டு இவர் பின்னாடி போகிறார்!

இளைஞர்கள்தான் இவரை அதிகம் பின்பற்றுகிறார்கள். அவர்கள்தான் பெரும்

துருக்கி நாட்டில் குடித்துவிட்டுக் கார் ஓட்டுபவன் காரை நகரிலிருந்து இருபதுமைல்களுக்கு அப்பால் கொண்டுபோய் நிறுத்தி விடுவார்கள். பின்னால் போலீஸ் வண்டி தொடர, குடிகார டிரைவர் அந்த இருபது மைல் நடப்பதற்குள் தன் சுய நினைவை அடைவதுடன், தண்டனையும் பெற்றவனாகித் திருந்துகிறான். -பி. நாராயணன்




"புதிய சமுதாயம் உருவாக வேண்டும்'' என்று ஒவ்வொரு பொதுக் கூட்டத்திலும் பேசுகிறீர்களே, எதைப் 'புதிய சமுதாயம்' என்று கூறுகிறீர்கள்?''

சந்திரசேகர்: ''புதிய சமுதாயம் என்று நான் கருதுவது, இந்தியப் பண்பாட்டோடு ஒட்டிய வளர்ச்சி மிக்க சமுதாயம். கலர் டி. வி. வந்து விட்டது. நம் நாடு தொழில் துறையில் முன்னேறிவிட்டது என்று குதிக்கிறோம். மேலைநாடுகளுடன் ஆடம்பரப் பொருள்களுக்கான தொழில் முன்னேற்றத்தில்தான் போட்டி போடுகிறோம். நம்முடைய நாட்டில் வறுமைக் கோட்டுக்குக் கீழே இருப்பவர்கள் கோடிக் கணக்கானவர்கள். ஏழைக்கும், பணக்காரனுக்கும் இருக்கும் இடைவெளி மிக அதிகம். எனவே நாட்டின் அத்தியாவசியப் பொருட்களை உற்பத்தி செய்வதில்தான் நம்முடைய முழுக் கவனத்தையும் செலுத்த வேண்டும். ஆடம்பரப் பொருட்களின் பக்கம் கவனம் செலுத்துவதெல்லாம் மக்களைத் திசை திருப்பும் முயற்சிதான்.

''இதற்காகத்தான் புதிய சமுதாயம் உருவாக வேண்டும் என்று சொல்கிறேன். மக்கள், ஆட்சியில் இருப்பவர்களோ அல்லது ஏதோ ஒரு தலைவரோ நமக்கு எல்லாவற்றையும் செய்துவிடுவார்கள் என்ற நம்பிக்கையை முதலில் விடவேண்டும். ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய சக்தியை உணர்ந்து, தனக்கும் நாட்டுக்கும் உபயோகப்படும் செம்மையான அறிவுடன் செயல்பட வேண்டும். இதுதான் என்னுடைய நோக்கம்.''

கேள்வி: ''இப்படிப்பட்ட சமுதாயத்தை உருவாக்க என்ன வழிமுறைகளைச் சொல்கிறீர்கள்?''

பதில்: ''ஆட்சியில் இருப்போரிடமும் சரி, மக்களிடமும் சரி, முதல் தேவை சிக்கனம்; எளிமை. எளிய ஆனால் சத்தான உணவு விஷயத்தில் ஏழைகளுக்குப் பிரசாரத்தின் மூலம் அறிவூட்ட வேண்டும். சத்தான உணவு இன்மையால் நல்ல புத்திசாலித்தனமோ, கல்வியறிவோ பெற முடிவதில்லை. இதனால் விரும்பத் தகாத பின் விளைவுகள் ஏற்படுகின்றன.

''இதுபோன்ற அத்தியாவசியமான விஷயங்களில் கவனம் செலுத்தினாலே நான் சொல்லும் புதிய சமுதாயம் உருவாகி விடும்.''

கேள்வி: ''இதுவரை இருநூற்றைம்பது மைல்கள் நடந்திருக்கிறீர்கள். மக்களை எந்த அளவுக்குப் புரிந்து கொண்டீர்கள்? அவர்கள் உங்களை எந்த அளவுக்கு வரவேற்றார்கள்?''

பதில்: ''மிகவும் குழப்பமான சூழ்நிலையில் தங்களுக்கு வழிகாட்ட நல்லதொரு தலைமை இல்லை என்று அவர்கள் உணர்ந்து இருக்கிறார்கள். ஏதாவதொரு விடிவுகாலம் தங்களுக்குப் பிறக்காதா என்று அவர்கள் ஏங்குவதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. பொதுக் கூட்டங்களில் நான் பேசுவதை மக்கள் கேட்கிறார்கள். அவர்கள்

# பேட்டி

குறைகளையும் என்னிடம் வந்து கூறுகிறார்கள். மக்களுக்கும் எனக்கும் இடையே நெருக்கமான நல்லதொரு நட்பு உருவாகி வருகிறது. இதுவே என்னுடைய முக்கிய சாதனை என்று நினைக்கிறேன்.''

கேள்வி: ''பிராந்தியக் கட்சிகளின் செல்வாக்கு அதிகரித்து வருவதானது நாட்டை எந்த அளவுக்குப் பாதிக்கும் என்று நினைக்கிறீர்கள்? மாற்றுக் கட்சி ஆளும் மாநிலங்களை மத்திய அரசு எப்படி நடத்தும் என்று நினைக்கிறீர்கள்?''

பதில்: மாநிலங்களில் பிராந்தியக் கட்சி பதவிக்கு வந்து விட்டதாலேயே பெரும் நன்மையோ அல்லது தீமையோ ஏற்பட்டுவிடப் போவதில்லை. நன்மையோ தீமையோ தலைவர்களின் தகுதியைப் பொறுத்துத்தான் ஏற்படும். அந்தந்தப் பிராந்தியத்தில் இருக்கும் மக்களின் உணர்வுகளை எடுத்துச் சொல்லப் பிராந்தியக் கட்சிகள் வளரலாம். ஆனால் இந்திய ஒருமைப்பாடு எந்த நிலையிலும் சீர்குலையக் கூடாது.''

கேள்வி: ''மாநில சுயாட்சியை நீங்கள் ஆதரிக்கிறீர்களா? மாநிலங்களுக்கு இன்னும் அதிகாரங்கள் வேண்டும் என்பதை ஒப்புக்கொள்கிறீர்களா?''

பதில்: ''ஒவ்வொரு சிறு விஷயத்துக்கும் நடைமுறையில் மத்திய அரசை எதிர்பார்ப்பது என்பது நடவாத காரியம்தான். மாநிலங்களுடன் மத்திய அரசு சுமுகமான பேச்சு வார்த்தை நடத்தித் தேவையான அதிகாரங்களை வழங்கலாம். ஆனால் ஒவ்வொரு மாநிலத்தின் மீதும் பொருளாதாரக் கட்டுப்பாடு மத்திய அரசுக்கு இருக்க வேண்டும். ஏனென்றால் ஒரு மாநிலம் வளர்ந்து, மற்றொரு மாநிலம் பொருளாதார ரீதியில் தாழ்ந்துவிட வாய்ப்புக்கள் உண்டு. தேசியம் நன்கு வளர வேண்டும், இந்திய மக்கள் அனைவரும் உயர வேண்டும் என்றால் ஒட்டுமொத்தமான பொருளாதாரக் கொள்கை இருப்பதே நல்லது. அதே போல் எல்லைப்புறக் காவல், வெளிநாட்டுக் கொள்கைகள் இவையும் மத்திய அரசிடமே இருக்க வேண்டும்.



நம்பிக்கையுடன் உற்சாகமாகப் பேசுகின்றனர். செல்வராசு என்னும் இளைஞர் ''பல வருஷங்களுக்கு முன்னுடி கன்னியாகுமரியிலிருந்து புறப்பட்ட பிரம்மச்சாரி விவேகானந்தர் உலகையே வென்றார். இப்போ இவர் இந்த நாட்டை வெல்லப் போகிறார்'' என்கிறார்.

பதினைந்து கிலோமீட்டர் ஆனவுடன் எங்காவது நல்ல நிழலான இடமாகப் பார்த்து எல்லோரும் உட்காருகிறார்கள். நிலக்கடலையும், பொட்டுக்கடலையும், வாளி நிறைய நீரும் வருகிறது. சந்திரசேகர் உட்பட எல்லாரும் ஒன்றாக உட்கார்ந்து சாப்பிட்டு விட்டுக் கொஞ்சநேரம் இளைப்பாறுகிறார்கள். அப்புறம் மீண்டும் நடை.

முதலிலேயே இந்த இந்த நாள், இந்த இந்த ஊர் என்று பட்டியல் தயாரித்து கட்சியாளர்களிடம் கொடுத்திருக்கிறார்கள். எனவே இவர்களுக்காக ஒவ்வொரு இரவும் அந்த அந்த ஊரில் தங்குமிடத்தை ஏற்படுத்தி தருகிறார்கள். பாத்ரூம் வசதி, போன்றவை இருந்தாலும் உண்டு இல்லாவிட்டாலும் இல்லை.

இரவு படுக்கப் போகு முன் தன்னைச் சந்திக்க வரும் ஊர் மனிதர்களிடம் பேசுகிறார் சந்திரசேகர். அவரவர்கள் குறைகளைக் கேட்டுக் கொள்கிறார். அதற்கப்புறம் தொலை பேசி இருந்தால் டில்லிக்கும், கர்நாடகத்துக்கும் பேசுகிறார். கண்ணயர மணி பன்னிரண்டாகி விடுகிறது. காலையில் டிபனை முடித்துக் கொண்டு மீண்டும் பாத யாத்திரை.

கன்னியாகுமரியில் ஆரம்பித்த பாத யாத்திரை டில்லியில் முடிய ஆறு மாதங்களாகும் என்கிறார்கள். முதலில் பதினைந்து நாட்களுக்கு இரண்டு நாட்கள் ஓய்வு என்று வைத்திருந்தவர்கள் இப்போது வாரத்திற்கு ஒரு நாள் என மாற்றி யிருக்கிறார்கள். நான் போயிருந்த அன்றைக்கு இரண்டு நாட்களில் அவர் டில்லிக்குப் போகப் போகிறார் என்ற செய்தி வந்தது. இது முறையா என்று அவரிடம் கேட்டேன்.

''நான் பாரத யாத்திரைதான் போகிறேன். எந்த ஒரு அரசியல் காரணத்துக்காகவும் இந்தப் பாத யாத்திரையை மேற்கொள்ளவில்லை. இது மக்களைப் புரிந்து கொள்ள நான் மேற்கொள்ளும் பயணம். எனவே நடுவில் குறுக்கிடும் வேலைக்காக வெளியூர் போவதில் தவறில்லை என்றே நினைக்கிறேன்'' என்றார்.

இவருக்கு வரவேற்பு அளிக்கும் கூட்டங்களில் எல்லாக் கட்சியினரும் கலந்துகொள்கிறார்கள். வழியில் கோவிலோ, சர்ச்சோ தென்பட்டால், மத வேறுபாடின்றி அங்கு வரும் எல்லோரும் இவரைச் சந்தித்து உரையாடுகிறார்கள்.

ஒரு எளிமையான கனவானான தலைவனை மூறிலிருந்து திருவள்ளாவரை அவருடன் நடந்த ஐம்பத்தைந்து கிலோ மீட்டரிலும் கண்டேன்.

-டி. ஆர். ரமேஷ்

மேலட்டை வண்ணப்படம்,
புகைப்படங்கள்: பால்ராஜ்

# வைரங்களை ஏலம் விட்டார்கள்!



"வைரங்களைக் கூடவா ஏலம் விடுவார்கள்?" என்ற ஆச்சரியத்துடன் சென்னை தென்னிந்திய வர்த்தக சபைக் கட்டிடத்தினுள் நுழைந்தபோது துப்பாக்கி ஏந்திய போலீஸ்காரர்கள் வரவேற்றனர். உள்ளே சுமார் 100 பேர். கைகளில் வெள்ளைப் புத்தகம் ஒன்று, மடிகளில் சிறு ப்ரீஃப் கேஸ்கள். வைர ஏலம் நடந்து கொண்டிருந்தது.

- 'நேஷனல் மினரல் டெவலப்மெண்ட் கார்ப்பரேஷன்' என்ற மத்திய அரசு நிறுவனம்தான் இந்த ஏலத்தை நடத்தியது. ஜனவரி 22 முதல் 24 வரை ஏலம்.

- இதற்கு முந்தைய மூன்று நாட்கள் வைரங்களைப் பரிசோதிக்க ஒதுக்கப்பட்டிருந்தது. ரூபாய் இரண்டாயிரம் கட்டிய வைர வியாபாரிகள் 'பரிசோதனை' கண்ணாடி சகிதம் வந்து வைரங்களைப் பரிசோதித்து மதிப்பீடு செய்தனர்.

- வைரக் கற்கள் சிறு சிறு பாக்கெட்டுகளில் வைக்கப்பட்டிருந்தன. ஒருசிலவற்றில் ஒரு பெரிய வைரக்கல், சிலவற்றில் ஒன்றுக்கதிகமான சிறு கற்கள், இன்னும் சிலவற்றில் நிறையச் சின்னஞ் சிறு கற்கள் எனப் பல வகை வைரங்கள் இருந்தன. பாக்கெட்டுகளுக்கு வரிசை எண்கள் கொடுக்கப்பட்டிருந்தன.

- ஒவ்வொரு வியாபாரிக்கும் பாக்கெட் எண், அதில் உள்ள கற்களின் நிறைபோன்ற விவரங்கள் அடங்கிய வெள்ளைப் புத்தகம் ஒன்று தரப்பட்டது. அவற்றில் தம் மதிப்பீடுகளை வியாபாரிகள் குறித்து வைத்துக் கொண்டனர்.

- முதல் நாள் ஏலத்தின்போது ஒரு காரட் வைரம் நூறு ரூபாய் முதல் பதினாலாயிரம் வரை போயிற்று. 2.68 காரட் எடையுள்ள வைரக் கல்லை ஒரு வியாபாரி ரூ. 17,815க்கு ஏலம் எடுத்தார்.

- முதல் நாள் சுமார் 300 பாக்கெட்டுகள் ஏலம் விடப்பட்டன. ஏலம் விடப்பட்ட தொகை சுமார் 5 லட்சம்.

- ஏலம் விடப்பட்டவை பட்டை தீட்டப் படாத கற்கள். இவற்றை வாங்கியவர்கள் பட்டை தீட்டிப் பயன்படுத்துவார்கள்.

- மினரல் டெவலப்மெண்ட் கார்ப்பரேஷன் அதிகாரிகள் ஒவ்வொரு பாக்கெட்டின் மதிப்பையும் ரகசியமாய் வைத்துள்ளனர். அந்த விலையைத் தாண்டி யாராவது ஏலம் கேட்டால் அந்தப் பாக்கெட் வைரத்தை அதிக விலை கேட்டவருக்கு, விலையை மூன்றுமுறை கூறி விற்கிறார்கள்.

- ஏலத்தின்போது வைரங்கள் பாங்க் லாக்கரில் வைக்கப்பட்டிருக்கும். வைரத்தை ஏலம் எடுத்தவர், கேட்ட தொகையில் 20 சதவிகிதத்தை உடனடியாக ரொக்கமாகச் செலுத்தி ரசீது பெற்றுக் கொள்ள வேண்டும். மீதிப் பணத்தை 30 நாட்களுக்குள் பாங்கில் செலுத்தி வைரங்களை வாங்கிக் கொள்ளலாம்.




- சென்னை தவிர, பம்பாய், ஜெய்ப்பூர் நகரங்களிலும் வைர ஏலம் நடக்குமாம். டெல்லி, கல்கத்தாவில் வைர மார்க்கெட் 'டல்' லாம். எப்போதாவதுதான் இந்நகரங்களில் வைர ஏலம் நடக்குமாம்.

- 1964 முதல் நம் நாட்டில் இத்தகைய ஏலங்கள் நடைபெறுகின்றன. சென்னையில் நடந்தது 90 வது ஏலம். சென்னையைப் பொறுத்தவரை இந்த நிதி ஆண்டில் முதலும் கடைசியும் இதுவே.

- ஒரு வைர வியாபாரியின் குறை: "தமிழ் நாட்டில் விற்பனை வரி ரொம்ப அதிகம். மற்ற மாநிலங்களில் விற்பனை வரி குறைவு. குஜராத்தில் விற்பனை வரியே இல்லை. விற்பனை வரி வைர வியாபாரத்தை மிகவும் பாதிக்கிறது."

- ஏலம் முழுதும் இந்தியில்தான் நடந்தது. அங்கிருந்த அதிகாரிகள் வைர வியாபாரிகளில் 99 சதம் பேர் முகத்தில் மார்வாடிக் களை தெரிந்தது.

**- எஸ். சந்திரமௌலி**






கல்கி

1983 பிப்ரவரி 6
துந்துபி தை 24
மலர்: 41 இதழ்: 28



# ராமராவ் செய்த நல்ல காரியங்கள்

தென்னிந்தியாவில் எல்லா மாநிலங்களிலும் ஆட்சியிலிருப்போர் பெயரளவில் ராமனாக இருந்தால் போதுமா? மெய்யாகவே சுபிட்சம் பெருக வேண்டுமானால் அதற்கேற்ற சீரிய கொள்கைகள் அல்லவோ செயலாக்கம் பெற வேண்டும்? ராமராஜ்யத்துக்கான ஆரம்ப அறிகுறிகளை ஆந்திராவில் காண்கிறோம்.

(1) அடக்கமான, அளவான அமைச்சரவையில் இளைஞர்கள் இடம் பெற்றுள்ளனர். (2) அரசாங்கக் காரியதரிசிகள் அரசியல் தலையீடு இன்றிச் செயல்படலாம் என்று முதல்வர் உறுதியளித்தார். (3) ராமராவ் தமது சொத்துக்களின் மதிப்பை வெளியிட்டதுடன் மற்ற அமைச்சர்களையும் அவ்வாறே செய்யுமாறு கோரியுள்ளார். (4) தமக்கு மாதச் சம்பளமாக ஒரு ரூபாய் போதும் என்று தீர்மானித்து விட்டார். (5) மக்கள் மன்றத்தின் முன் பதவி ஏற்றார். (6) ஏ.ஸி. கார்களையும் அயல் நாட்டு வாகனங்களையும் அமைச்சர்கள் பயன்படுத்த மாட்டார்கள் என அறிவித்தார். (7) ''லஞ்ச ஊழலில் ஈடுபடும் அதிகாரிகளுக்கு எமனாக இருப்பேன்'' என்று கலெக்டர் மகாநாட்டில் கூறி அவர்கள் ஒத்துழைப்பை வேண்டினார். (8) பாதிரிகுப்பம் சம்பவங்களை யொட்டித் தம்மீது பழிசுமத்த முயன்ற இ. காங்கிரஸ் கட்சியினரை வெலவெலத்துப் போகச் செய்து அவர்கள் தங்களைத் தற்காத்துக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு ஆளாக்கினார். (9) வருவாய் குறைந்தோர்க்கு மலிவு விலையில் அரிசி கிடைக்க ஏற்பாடுகளைக் கவனித்து வருகிறார். (10) பள்ளிகளில் மதிய உணவுத் திட்டத்தை அமலாக்குகையில் குழந்தைகளுக்குப் பாலும் ரொட்டியும் தர முடிவு செய்து பள்ளிகள் சமையல் கூடங்களாக மாறுவதைத் தவிர்த்தார். (11) தமது கட்சி எம். எல். ஏ.க்கள் வெறும் தலையாட்டிப் பொம்மைகளாக இராமல் மாநிலத்தின் வளர்ச்சிக்குத் திட்டமிடுவதில் தீவிர பங்கேற்க வேண்டும் என்ற நோக்கில் ஒரு புதிய ஏற்பாட்டைச் செய்துள்ளார். இதன்படி ஒவ்வொரு அமைச்சரவையையும் ஒட்டி பத்து – இருபது எம். எல். ஏ.க்கள் அடங்கின குழு ஒன்று அமைந்து அமைச்சரவை திறம்பட இயங்கவும் மாநிலத்தின் முன்னேற்றத்துக்கும் யோசனைகள் கூறும். (12) மத்திய – மாநில

உறவுகளில் மாநில நலனை உத்தேசித்துக் கண்டிப்பும் கற்றும் காட்டும் போதே மத்திய அரசுடன் ஒத்துழைக்கவும் தாம் தயாராக இருப்பதை வெளியிட்டுள்ளார். (13) தெலுங்கு தேசம் ஒரு பிராந்தியக் கட்சிதான் எனினும் பிராந்திய உணர்வுக்காகத் தேசிய ஒருமைப்பாட்டைக் காவு கொடுக்கும் கட்சியல்ல என்பதைச் சொல்லாலும் செயலாலும் நிரூபித்து, குடியரசு தினத்தன்று கட்சி அலுவலகத்தில் தேசியக் கொடி ஏற்றினார். (14) ஆந்திர அரசின் ஏராளமான வாரியங்கள், கார்ப்பொரேஷன்களின் தலைவர்களாக அரசியல் காரணங்களை உத்தேசித்து நியமிக்கப்பட்டவர்களை ராஜிநாமாச் சமர்ப்பிக்கக் கோரியுள்ளார். வாரியத்தின் மானேஜிங் டைரக்டர்களே இனி சேர்மனாகவும் இயங்குவர். (15) தேவையில்லாத வாரியங்கள், கார்ப்பொரேஷன்களுக்கு மூடுவிழா நடத்தப் போவதாகக் கூறி நிர்வாகச் சிக்கன நடவடிக்கைகளுக்குப் பிள்ளையார் சுழி போட்டுள்ளார். (16) பணம் வாங்கிக் கொண்டு கல்லூரிகளில் இடம் தரும் தீய பழக்கத்தை ஒழிக்கத் தனியார் மருத்துவ, பொறி இயல் கல்லூரிகளை அரசுடைமையாக்குவதாக அறிவித்தார்.

இவையெல்லாம் செய்த என். டி. ஆர். குடியரசு தினத்தையொட்டி தமது படத்துடன் பத்திரிகைகளில் அரசுச் செலவில் முழுப் பக்க விளம்பரம் வெளியிட்டுள்ளது மட்டும் திருஷ்டி பரிகாரம் போலிருக்கிறது. போகட்டும், ராமராஜ்யத்துக்கான முயற்சிகள் ஆரம்ப சூரத்தனத்தோடு நின்றுவிடாமலிருந்தால் சரி.

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



## ஜோதி

● கிராமத்திற்கு நாடகமாட வந்த கதாநாயகன் அதே ஊரில் டீக்கடை வைத்திருக்கும் நாயகியைக் காதலிக்கும் கதை.
காதலிக்கும் காதலனுக்கும் குறுக்கே நிற்கப் பெற்றோர்கள் இல்லாமல் இருந்தும் அவர்களது காதலை நிறைவேற்றாமல் கதையை வழவழாவென வளர்த்திக் கொண்டு போயிருக்கிறார்கள்.
கண்ணம்மா நடத்தையில் வீண் பழி... தங்கைகளின் பாரம்... போதாத குறைக்கு ஊரில் ஒரு வில்லன் கண்ணம்மாவை அடையக் குறி வைத்தபடியே திரிகிறான். கதாநாயகனோ கையாலாகாதவன் போல டீக்கடையில் பொழுதைக் கழித்தே கதையை முடிக்கிறான்.
மோகனும் அம்பிகாவும் ஒட்டாத ஜோடி. எட்டாத நடிப்பு. வில்லன் சத்யஜித்தைத் திரும்பத் திரும்பக் காட்டி எரிச்சலூட்டுகிறார்கள்.
சிலுக்கு இருந்தும் பயனில்லை. யார் யாரோ வந்து போகிறார்கள்.
டீக்கடைக்குக் கொடுக்கப் பட்டிருக்கும் முக்கியத்துவம் கூடக் கதைக்கு இல்லை. வண்டல்.



## யுத்த காண்டம்

● கிருஷ்ணா மற்ற குடித்தனக்காரர்களுடன் கூட்டணி அமைத்துக் கொண்டு முகுந்தனை விரட்டப்போய்க் கடைசியில் அவனுடைய இதய வீட்டுக்குள் தானே குடிபுகுந்துவிடுகிறாள்.

இப்படிப்பட்ட 'காலி'ப் பிரச்னையை வைத்துக் கொண்டு படம் பார்ப்பவர்களின் காதுகளுக்கு 'நிறை'வைத் தந்திருக்கிறார் கோமல் சுவாமிநாதன்.

பஞ்சதந்திர மாட்டுக் கதையில் வந்த மாதிரி மாடியில் குடியிருக்கும் நால்வரையும் பிரிக்கக் கிருஷ்ணா செய்யும் சூழ்ச்சிகள் படுசுவை!

கதையின் ஆரம்பத்தில் கதாபாத்திரங்கள் ஒவ்வொருவரையும் அறிமுகப் படுத்தும் போதே டைரக்டர் கோமலின் முகமும் நமக்கு அறிமுகமாகி விடுகிறது. சமுதாயப் பிரச்னைகளை மட்டும் அணுகாமல் ஒரு சாதாரண வீட்டுக்குள்ளும் அவர் குடிவந்திருப்பது பாராட்டப்பட வேண்டிய விஷயம்.

பல வீடுகளுக்குச் சொந்தக்காரரான முகுந்தன் வாடகை வீட்டில் அட்டைபோல் ஒட்டிக் கொண்டு பிடிவாதம் பிடிப்பதற்குக் கதையில் போதுமான 'வலு' இல்லை. முகுந்தனாக வரும் ராஜீவ் பேச்சில் நல்ல வாதமும் உண்டு. நடிப்பில் பிடிவாதமும் உண்டு.

ஸ்ரீப்ரியாதான் கிருஷ்ணா. வீட்டைக் காலி செய்யச் சொல்லிக் குடித்தனக்காரர்களுக்கு நோட்டீஸ் கொடுக்கும்போது நல்ல மிடுக்கு. மாடியில் தன்னந் தனியாக இருக்கும் ராஜீவ் முன்பு படுக்கையை விரிக்கும்போது நல்ல துடுக்கு.

வாத்தியார் ராமன் தனது இரண்டாவது மனைவி மீது சந்தேகப்படும் இடங்களில் சலசலக்க வைக்கிறார். மற்ற நடிகர்களுள் நடிப்பில் கொடி பிடிப்பவர் 'அப்பாவி' பாஸ்கர்தான். இவர் நிலத்தில் நீச்சலடிக்கும் போது அனுதாபத்தைத் தேடிக் கொண்டு விடுகிறார்.

வீட்டுக்காரியையும் குடித்தனக்காரரையும் மோத விடும் நேர்த்தியை அக்கம் பக்கத்துக் காரர்களைப் போல் யாரும் ரசிக்கலாம்.



# ஆகாய கங்கை

● காதலர்கள் கார்த்திக் — சுகாசினி.

காதலன் எழுதி வீசிய கடிதத்தைப் படிக்க பாத்ரூமை சுகாசினி தேர்ந்தெடுப்பதும், அங்கே அவர் குழாயைத் திறந்து விட்டு, கதவை மூடிக் கடிதத்தைப் படித்து மெய்மறந்து போவதும், குழாய்த் தண்ணீர் வெள்ளமாக மாறி அந்தப் பக்கம் படுத்திருக்கும் அப்பா, அம்மாவை உசுப்பிவிட, அவர்கள் பதறியடித்துக் கொண்டு பாத்ரூம் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வர, திகைத்துப் போன சுகாசினி கடிதத்தைக் கசக்கி ஜன்னல் வழியாக வெளியே வீசுகிறாரே — அந்த இடம்....

வீசப்பட்ட கடிதத்தை வேலைக்காரி உஷா எடுத்துப் படித்துவிட்டு அதில் எழுதியிருந்தபடி தன் சம்மதத்துக்கு அறிகுறியாகப் பச்சைப் புடவை உடுத்திக்கொண்டு கோவிலுக்கு வர, அங்கே காத்திருக்கும் கார்த்திக் திகைக்கிறாரே... அந்த இடம்...

பின்னாடியே சுகாசினி பச்சையும் இல்லாமல், சிவப்பும் இல்லாமல் மஞ்சள் நிறப் புடவை கட்டி அங்கு வர அதன் உள் அர்த்தத்தைப் புரிந்து கொள்ள முடியாமல் கார்த்திக் குழம்பியவாறே கிளம்ப எதிரில் வரும் சிக்னல் விளக்கைக் கொண்டே புரிய வைக்கிறாரே...

அந்த இடம்......

மணிவண்ணனின் பேறு டைரக்டர் பாரதிராஜாவின் ரூபத்தில் சிறகடிக்கிறது.

என்றாலும் தந்திக் கம்பிகளை நீட்டிவிட்ட மாதிரி காதல் முக்கோணத்தை நீட்டோ நீட்டு என்று நீட்டியிருப்பதில் எழுந்த பலவீனம் படத்தில் இடம் பெற்ற சில நல்ல காட்சிகளை மறக்கச் செய்து விடுகிறது.

''பெற்றோர்களாகப் பார்த்து வாங்கித் தரும் புடவையும் கணவனும்தான் நிலைக்கும்'' என்கிற வடி(வு)வோபதேசத்தைக் கேட்டுவிட்டு சந்தோஷப்பட்டோம்.

அந்த உபதேசம் பொய் என்பது போலல்லவா இருக்கிறது முடிவு!

சுகாசினி மட்டும் ஏமாறவில்லை. நாமும்தான்.

— திரைஞானி





ஆடிட்டர் ஸ்ரீ S. பத்மநாபன் (Partner, Suri & Co.) அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி **ராதாவிற்கும்** ஸ்ரீ D. சங்கமேஸ்வரன் (Factory Manager, Madras Industrial Linings Ltd.) அவர்களின் குமாரன் சிரஞ்சீவி **ரவிக்கும்** சென்னையில் சமீபத்தில் திருமணம் வெகு விமரிசையாக நடந்தேறியது.

வாழ்க மணமக்கள்

# வித்யா பவனம் வெள்ளி விழா

**மா**தம் இருநூற்றைம்பது ரூபாய் பட்ஜெட்டில், சின்ன வாடகை அறையில் 1938ல் தொடங்கப்பட்ட பாரதீய வித்யாபவனத்தின் இன்றைய பட்ஜெட் ஆண்டொன்றுக்கு மூன்றரைக் கோடி ரூபாய்!

பாரதீய வித்யாபவன் — சென்னைக் கிளையின் வெள்ளி விழா அண்மையில் ஆளுநர் குரானா தலைமையில் நடைபெற்றது.

பவனத்தின் பணிகள் இந்தியாவில் மட்டுமின்றி வெளி நாடுகளிலும் பரவியுள்ளது என்றால் இதனை நிறுவிய குலபதி கே. எம். முன்ஷியின் நல்ல உள்ளம்தான் காரணம்.

வரவேற்புரையில் திரு வி. எஸ். குறிப்பிட்டார்: ''இருநூறு ஆண்டுக் கால அறிவியல் தொழில் நுட்ப வளர்ச்சியால் பொருளியல் மதிப்பீடுகள்தான் முக்கியத்துவம் பெற்றன. ஆன்மீக கலாசார ஒழுக்க உணர்வுகள் சிதைந்து போயின. போரிலும், அழிவுச் சக்திகளிலுமே மனித சிந்தனைகள் விரைகின்றன.''

இந்த நிலைக்கு மாற்றுக் காணும் நோக்கத்தில் பண்பாட்டையும், ஆன்மீக உணர்வுகளையும் கட்டிக் காக்கும் குறிக்கோளுடன் தொடங்கப்பட்டது பாரதீய வித்யாபவனம்.

950 தலைப்புக்களில் புத்தகங்களை வெளியிட்டுள்ள சக்தி வாய்ந்த நூல் பதிப்புத் துறை இவர்களுடையது. ''பத்து மில்லியன் பிரதிகள் இதுவரை விற்பனையாகியுள்ளன'' என்று திரு வி. எஸ். குறிப்பிட்டார்.

ராஜாஜியின் ராமாயணம் இருபத்தோரு பதிப்புகளும், மகாபாரதம் இருபத்தி நாலு பதிப்புகளும் வெளியாகி யுள்ளன. எந்த அளவு பிரபலமடைந்திருக்கிறது என்பதற்கு ஓர் உதாரணம் சொன்னார் வி. எஸ்.: ''ஒரு ஐ. ஏ. எஸ். தேர்வில் ராமாயணம் யார் எழுதியது என்ற கேள்விக்கு ராஜாஜி என்று பதிலளிக்கப்பட்டது!''

வி. எஸ். கூறிய மற்றொரு சுவையான செய்தி கல்கத்தா கிளையைப் பற்றியது: இறைப் பற்று இல்லாத கம்யூனிஸ்டுகள் ஆளும் மாநிலமாயிற்றே என்று பவனைச் சேர்ந்த இவர்கள் தயங்கிக் கொண்டிருக்க, மூன்றாண்டுகளுக்கு முன்னால், மேற்கு வங்க முதல்வரே கேட்டாராம், ''வித்யாபவன் கிளையை இங்கே ஏன் நீங்கள் தொடங்கக் கூடாது?'' என்று. இவர்கள் சம்மதம் தெரிவிக்க, நிலமும் தரப்பட்டதாம்!

பவனத்தின் நற்பணிகள் எப்படி மக்களை ஈர்க்கின்றன என்பதற்கு எடுத்துக்காட்டு: ''ஓர் அன்பர் என்னுடைய எளிய காணிக்கை என்று ஒரு காசோலையைத் தந்தார். பிரித்துப் பார்த்தால் அதிர்ச்சி. ஒரு கோடி ரூபாய் நன்கொடை தந்திருந்தார் அவர்'' என்று குறிப்பிட்டார் திரு வி. எஸ்.

கோவை மாவட்டத்தில் பிறந்து ரிஷிகேசம் சுவாமி சிவானந்தாவிடம் சீடராக இருந்து இப்போது அமெரிக்காவில் வர்ஜீனியா நகரில் ஆன்மீகத் தொண்டாற்றி வருகிற சுவாமி சச்சிதானந்தா திருவிளக்கு ஏற்றி வெள்ளி விழாநிகழ்ச்சிகளைத்தொடங்கி வைத்தார்.

அமெரிக்காவில் பாரதீய வித்யாபவனத்துக்காகத் தம்முடைய ஆசிரமத்தின் இருபது ஹெக்டேர் நிலத்தை வழங்கியுள்ளார் சுவாமி சச்சிதானந்தா. சர்வ சமய ஜோதி வழிபாட்டுக்காக வர்ஜீனியாவில் 'லோட்டஸ்' என்ற அமைப்பை உருவாக்கி வருகிறார் சுவாமிஜி. திசை தடுமாறி அலைந்த பல அமெரிக்க இளைஞர்களை நல்வழிப்படுத்தி யோகாவில் ஈடுபடுத்திய பெருமை இவருடையது. போதை சக்திகளிலிருந்து மீட்கப்பட்ட நூற்றுக் கணக்கான சீடர்கள் மது, மாத்திரைகள், சிகரெட் எல்லாவற்றையும்



சுவாமி சச்சிதானந்தா

விட்டு விட்டு ஆன்மீகத் தேடலில் ஆர்வம் காட்டுகிறார்கள்.

சுவாமிஜியின் சிறப்புரையிலிருந்து இரு விஷயங்கள்:

● அமெரிக்க டாக்டர்களே ஆராய்ச்சி செய்து கூறுகிறார்கள். மத நம்பிக்கையுடையவர்கள் மற்றவர்களைக் காட்டிலும் சீக்கிரத்தில் நோய் குணமடைகிறார்கள்!

● மக்கள் மன அமைதி இழந்து தவிக்கும்போது உலகம் முழுவதும் போதை மருந்துகளின் ஆதிக்கம் பரவி விட்டது. திடீர் இட்லி, திடீர் காப்பி வகையறாக்கள் மாதிரி ''சமாதி'' என்கிற மன அமைதி நிலையும் ''திடீர்'' ஆகக் கிடைக்குமோ? ஆன்மீக உணர்வுகள்தான் மனத்தைப் படிப்படியாகத் தூய்மைப் படுத்தி அமைதி தர முடியும்.

-சுப்ர பாலன்

புகைப்படங்கள்: பிரஸ் போட்டோ ப்யூரோ

✱ வி. எஸ்ஸுடன் ஆளுநர்



⌘ லட்சுமி செங்குட்டுவன், வேலூர்

? மதம் மாறுவது அவரவர் விருப்பம் என்று சங்கராச்சாரியார் சொல்கிறாரே?

! சரியாகத்தானே கூறியுள்ளார். மதம் மாறுவது தனி நபர் விருப்பம். -மதம் மாற்றுவது — அதுவும் கூட்டம் கூட்டமாக —அரசியல் பிரச்னைகளைத் தோற்றுவிக்கும் என்கிறார்.

⌘ வானதி, கெங்கவல்லி

? சென்னை டெலிவிஷன் நிலைய அதிகாரிகள் கணித மேதை சகுந்தலாதேவியிடம் நடந்து கொண்டது குறித்து...?

! புரட்டிப் போடுங்கள்; சகுந்தலா தேவி டெலிவிஷன் நிலைய அதிகாரிகளிடம்நடந்து கொண்டது குறித்து நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ, அதையேதான் நானும் உமது கேள்விக்குப் பதிலாக எண்ணு கிறேன்.

⌘ மோ. க. இரத்தினசாமி மோகனூர்

? கை நிறைய சம்பளம்,கௌரவமான உத்யோகம் இருந்தும் கூட ஐ. ஏ. எஸ். அதிகாரிகள் பலர் தங்கள் பதவியை ராஜினமா செய்துள்ளனரே?

! ஆனல் இவர்களில் யாருக்குமோ முஸ்ஸோரி ஐ.ஏ.எஸ். பயிற்சி நிலையத் தலைவர் அப்புவைப் போல் வெளியே வந்ததற்கான காரணங்களை விளக்க 'தில்' இல்லையே! சங்கப்பா கூட பொதுப்படையாகத்தானே ராஷ்டிரபதிக்கு எழுதியிருக்கிறார், தமது ராஜினமா கடிதத்தில்.

? கட்சி மாறியதோடு, அது நாள் வரை இருந்த கட்சியையும் தலைவரையும் குறை கூறிப் பேசும் எட்மண்ட் போன்றோருக்கு என்ன தண்டனை விதிக்கலாம்?

! கட்சி மாறினல் தொகுதி மக்களைத் தேர்தலில் மீண்டும் சந்திக்க வேண்டும் என்ற தண்டனைதான். இவர்களுக்கு ஏற்றது. ஆனல் தேர்தல் கமிஷனின் இந்த யோசனையைச் சட்டமாக்கப்போவது இன்றைய சுயநல அரசியலில் யார்?

⌘ சி. ராம்கோபால், திருவாரூர்

? மோஹிந்தர் அமர்நாத் ஆட்டம் எப்படி? ஒரே வரியில் சொல்லுங்கள்!

! லாலாவின் பாலா

⌘ கோடை சேகர், புதுக்கோட்டை

? பிரதமர் இந்திரா கடைசி மூச்சுவரை தேசத்துக்கு உழைப்பேன் என்று சொன்னதன் அர்த்தமென்ன?

! நல்ல அர்த்தத்தில்தான் கூறியிருக்கிறார். அவர் உழைப்பை யாரும் குறை கூறவும் முடியாது. ஆனல் எந்தக் கொள்கைகளின் அடிப்படையில் உழைக்கிறார் என்பதையொட்டித்தான் உழைப்புக்குப் பலன் கிட்டும். விழலுக்கு நீர் இறைப்பவன் கூடத்தான் உழைக்கிறன்.

⌘ எஸ். எம். ஹாமீத் நவீர், ஆத்துப்பாலம் ★

? நாளுக்கு ஒரு பத்திரிகை புதிதாக வெளி வருவது எதைக் காட்டுகிறது?

! 75 லட்சம் 80 லட்சம் என்று முதலீடு செய்து பெரிய இயந்திரம் வாங்கும்போது




அது பல லட்சம் பிரதிகளைவண்ணத்தில் ஒரு நாளில் அச்சடித்துத் தள்ளி விடுகிறது. பாக்கி நாளில் மிஷின் சும்மா இருந்தால் வட்டியே கட்டி வராது. எனவே புதுப் பத்திரிகை ஆரம்பிக்கிறார்கள். இதற்குப் பதில் ஒரே அச்சகம் பல்வேறு நிறுவனங்களுக்குச் சொந்தமான பத்திரிகைகளை அச்சடித்துத் தருவது பொருளாதார ரீதியில் புத்திசாலித்தனமாக இருக்கலாம். மேல் நாடுகளில் இப்படித்தான் நடக்கிறது.

⌘ ஜெயந்தி, சுவாமிமலை

? வாழ்க்கையில் எத்தனையோ மகிழ்ச்சிகள் பிறந்தாலும் மனத்தின் ஒரு மூலையில் நெருடல் தட்டுகிறதே, ஏன்?

! அந்த நெருடல் இருப்பதால்தான் மகிழ்ச்சியின் தன்மையை உணர முடிகிறது. என்பதைப் புரிந்து கொண்டால் நெருடலையும் வரவேற்பீர்கள்.

⌘ மனோபாரதி, பாண்டிச்சேரி

? இன்றைய இளைய தலைமுறையின் இப்போதைய கவலை எது?

! டி. ஏ. சேகருக்கு எத்தனை விக்கெட் விழும் என்பதே. அவரைப் பற்றிச்சில தகவல்கள்: தெய்வ பக்தி. இரண்டு வேளை பூஜை. மாட்ச் ஆடும்போது கழுத்தில் பெருமாள் டாலருடன் கூடிய தங்கச் செயின் இருக்கும். பாகிஸ்தான் புறப்படுவதற்கு முதல் நாள் காஞ்சிப் பெரியவரைத் தரிசித்து ஆசி பெற்றார். இவருக்கு ஹீரோ லில்லி. ஸெண்டிமெண்ட்: மாட்ச் ஆடும்போது சட்டை, சாக்ஸ் போன்ற ஏதாவது ஒன்றைப் புதிதாக வாங்கி அணிதல். பொழுதுபோக்கு: (1) இசை — ஜேசுதாசை யாராவது குறைத்துப் பேசினல் சண்டைக்குப் போய்விடுவார். (2) சினிமா -கமல் படங்கள் ரொம்பப் பிடிக்கும். ஸ்ரீகாந்த் ஃபோனில் கோரியபடி பருப்புப் பொடி, தேங்காய்ப் பொடி கொண்டு போயிருக்கிறார். கேரளத்துக்கு எதிராக ஆடும்போது முதல் இன்னிங்ஸில் மூன்று இரண்டாவது இன்னிங்ஸில் ஒன்பது விக்கெட்டுகள் எடுத்து வி. வி. குமாருக்கு இணையாகச் சாதனை புரிந்த 26 வயதான எல்ஜியின் பேச்சிலர்.

⌘ டி. எஸ். ரெட்டி, வேலிடுபேட்டி

? உழைப்பின் வெற்றி எப்படி இருக்கும்?

! மாதம் ரூ. 75 சம்பளத்தில் பௌதிக டெமான்ஸ்ட்ரேட்டராக கே. லக்ஷ்மி நாராயணன் விவேகானந்தா கல்லூரியில் சேர்ந்து ஆத்மார்த்தமான உழைப்பை 35 ஆண்டுகள் அதற்கு அளித்துப் படிப் படியாகப் பதவிகளில் உயர்ந்து இன்று ஒய்வு பெற்றுள்ளார். மூன்று முறை தாற்காலிக பிரின்சிபாலான பெருமை உண்டு. மாணவர்களுக்குப் பௌதிக போதனையே வாழ்க்கையின் ஒரே லட்சியம் என்று இருந்த இவர் அதற்கான உழைப்பிலேயே இரு கண்களிலும் பார்வை இழந்தார். ஈட்டியசெல்வம் மாணவர்களின் நன்றி மட்டுமே. ஆக, உழைப்பின் வெற்றியை மன நிறைவு என்ற அளவு கோலால் மட்டுமே கணிக்க முடியும்.

# ஜோதீந்தர் அமர்ந்த ஆட்டம் எப்படி?

லக்ஷ்மி நாராயணன்

சேகர்

காமேஷ்

எட்மண்ட்

சகுந்தலாதேவி

மோகன்தாஸ்

⌘ வெ. வைத்தியநாதன், களஞ்சேரி

? மண்டல் கமிஷன் அறிக்கை பிராமணருக்கு எதிரானதா?

! இல்லை. சமதர்ம சமுதாயத்துக்கும் நாட்டின் முன்னேற்றத்திற்கும் எதிரானது.

⌘ ஆர். சுப்பாராவ், திருக்கோவிலூர்

? வாழ்க்கையில் வெற்றிக்கு வழி வேகமா? விவேகமா?

! விவேகம் நிர்ணயிக்கும் அளவில் வேகம்.

⌘ ஆர். ஜே. அருண், திருச்சி

? அயல் நாட்டு கராத்தே குங்ஃபூ படங்களைப் போல் நம்நாட்டு சிலம்புச் சண்டை போன்றவற்றை மையமாக்கிப் படமெடுத்தால் ஓடுமோ?

! ஆற்றலுடன் படமெடுத்தால் ஓடும். உதாரணம் முரட்டுக் காளையில் மஞ்சு விரட்டு.

⌘ ஆர். நாகராஜன், பரசலூர்.

? தங்கள் மனத்தை வாட்டிய அம்சம் எது?

! காமேஷ் மறைவு. மேடையிலே மெல்லிசை நிகழ்ச்சிகள் மிகப் பிரபலமாவதற்கு முன்னோடிகளாக இருந்தவரில் ஒருவர். சிறந்த கலைஞர். தாள வாத்தியங்கள் மட்டுமின்றி நரம்பு வாத்தியங்களையும் வாசிப்பதில் வல்லவர். சிகரெட் அரக்கன் அவர் காலைக் காவு கொண்டான். மது அரக்கனோ அவர் உயிரையே குடித்து விட்டான். அவரிடம் மனம் மாறுபட்டு அவரைப் பயன்படுத்திக்கொள்வதை நிறுத்தியவர்கள்கூட அவரால் ஏற்கனவே பயனடைந்ததை மறவாமல் அவர் சடலத்தைத் தோள் கொடுத்துத் தூக்கிய காட்சி மனத்தை உருக்கியது. நல்ல குணச்சித்திர நடிகையாக விளங்கும் அவரது மனைவி கமலாவுக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்கள். தாய் வாழையான காமேஷ் நலை சாய்த்தாலும் அடிவாழையாக அவருக்கு நன்றி சொல்லிக் கொண்டு பல கலைஞர்கள் தோன்றியிருப்பதைப் பார்த்துக் கமலா ஆறுதல் அடையட்டும்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்
எஸ். எம். ஹாலித் நவீர்
ஆத்துப்பாலம் - 641 023



# இடையில் தடங்கல் ஏற்படுமா?

● சுஜாதாவை அனிதா ராமச்சந்திரன் பேட்டி கண்டு எழுதியது பார்த்தேன். நாலாவது நாடகத்தின் கதைப் பொருளும் ஏற்கனவே நான் முப்பது ஆண்டுகளுக்கு முன் எழுதி, ஆனந்த விகடனில் வெளியான தும், எனது உதய குமாரி சிறுகதைத் தொகுப்பில் உள்ளதுமான 'நவமும் கிருஷ் ணன்' என்ற சிறுகதையின் பொருளும் அப்படியே ஒன்றாக இருப்பதைக் கண்டு வியப் படைந்தேன்.
சென்னை-40 மீ.ப.சோமு

● தலையங்கம் படித்தேன். தமிழகத்தி லுள்ள பெரும்பாலான பத்திரிகைகள் இன் றைய நூலக இயக்குனரின் செயலைக் கண் டித்து எழுதியாயிற்று. ஆனால் அவர் இடித்த புளி மாதிரி எதையும் கண்டு கொள்ளாமல் இருக்கிறார். கல்வி அமைச்சரும் அவருக்குத் துணையாக வக்காலத்து வாங்குகிறார். 'தமிழ் எங்கள் உயிர்' என்று பேசுவதோடு சரி. நூலக மறுமலர்ச்சிக்கு இவர்களால் எதுவும் செய்ய முடியவில்லை.
கல்பாக்கம் சி. பி. ராஜு

● உமாபதி பங்காரப்பாவைப் பூனையாகச் சித்திரித்துக் கார்ட்டூன் போட்டிருந்தார். பாராட்டுக்கள். இந்தப் பூனை உதவி முதல் வர், மந்திரி பதவி போன்ற பாலையும், பழத் தையும் விரும்பவில்லை. முதலமைச்சர் பதவி யான இனிக்கு ஆசைப்படுகிறது. பார்த்துக் கொண்டே இருங்கள். கூடிய சீக்கிரம் அடித்துச் சாப்பிட்டுவிடும்.
மோகனூர் மோ. க. இரத்தினசாமி

● நீங்கள் கேட்டவை பகுதியில், பங்கா ரப்பா நடந்து கொண்ட முறை பற்றிய கருத்துச் சரி. ஆனால் ஹெக்டே முதல்வ ரானது குறித்து விவரமறிந்த தாங்களே 'அவர் தலைமைப் பொறுப்பில் திணிக்கப் பட்டதாக' எழுதலாமா? தமது கட்சி ஆளும் மாநிலங்களில் முதல்வர்களைத் தன்னிஷ்டம் போல் திணிக்கிற வேலை, இந்திரா காங்கிரஸ் தலைமையின் ஸ்பெஷாலிட்டி. அதை ஜனதா ஒருபோதும் செய்யாது.
கெங்கவல்லி வானதி
ஜனதா செயலாளர்

● நீண்ட நாட்களுக்குப் பிறகு செய்திகளை வாசிக்க ஆரம்பித்திருக்கிறார் செம்பியன். இனிமேல் இடையில் தடங்கல் ஏற்படாமல் செய்திகளைத் தொடர்ந்து வாசிக்க வேண் டும் என்று வாசகர்கள் சார்பாகக் கேட்டுக் கொள்கிறேன்.
குடியாத்தம் ஆர். அரிகோபி

● 'பூர்ணிமா போடும் புதிர் போன்றவை களுக்கு இரண்டு பக்கம் வேஸ்ட் செய்வது அவசியம்தானா, கல்கியாரே!' என்று எழுத லாம் என்று நினைத்தால் — அதைப் 'பல தடவை பார்த்து மண்டையை உடைத்துக் கொண்டு, விடையைச் சரிபார்த்தது' நினை வுக்கு வருகிறதே ஐயா! என்ன செய்ய?
நெல்லை-1 ஜி. சதாசிவம்

● திரைப்பட விழா பற்றி பி.எஸ்.ஆர். மிக அழகாகக் கட்டுரை வடிவம் அமைத்து வரு வதை ரசித்து வருகிறேன். முதல் பகுதியில் 'சோக்' படத்தின் கதையைக் கூறும்போது (கருக்கம்: குபர்ப்!) படத் தலைப்பின் பெயரை ஆச்சரியகரமாகத் தவறாக பி.எஸ்.ஆர். மொழிபெயர்த்துள்ளார். 'சோக்' என்பது வங்காளியில் 'அபின்' என்று பொருளில்லை. 'சோக்' என்றால் 'கண்'களைக் குறிக்கும்.
கல்கத்தா-26 வெ. பாலசந்திரன்

● டைரக்டர் ஜெகந்நாதன் கற்ற அனுப வத்திலிருந்து நாங்களும்தான் கற்க வேண் டியது நிறைய உள்ளது.
சென்னை-17 கே. சங்கர்

● ''கிராமத்து பரமசிவத்தின் மூலம் கூட கதையைப் படம் பிடித்துக் காண்பிக்க முடியும்'' என்று சாதனையல்லவோ புரிந்து விட்டார் கல்கிதாஸன். கதை முதல் தரம் ஸார். காலத்துக்குத் தேவையான ஒன்று.
மதுரை-3 தேவநாதன்

எகிப்தில் பழைய அதிபர் சதாத் தின் சகோதரர், அவர் மனைவி, 15 குழந்தைகள் ஆகியோரை லஞ்ச ஒழிப்பு நீதி மன்றத்தில் விசாரிக்கப் போகிறார்கள். இதில் விசேஷம் என்னவென்றால், இத்தகைய நீதி மன்றங்களை அமைத்து இயங்கவைத் தவரே காலஞ்சென்ற திரு. சதாத் தான்! டைம்ஸ் ஆஃப் இந்தியா
-ஆர். மார்க்கண்டன்



## ஆரோக்கியம், ஆனந்தம், ஒன்றுக்கொன்று ஆதாரம்!
## போர்ன்விடா பருகுங்கள்.

உங்கள் குடும்பத்தினருக்கு இன்சுவைமிக்க காட்பரிஸ் போர்ன்விடா வழங்குங்கள். கோகோ, மால்ட், பால் மற்றும் சர்க்கரையின் நற்பண்புகள் நிறைந்துள்ளது, போர்ன்விடா— உங்கள் குடும்பத்தினருக்கு அன்றாடம் இருவேளை வழங்குங்கள்.




OBM/8845 R-TAM.

காட்பரிஸ்

**போர்ன்விடா** உங்களோடு வளரும் நன்மை

# 'வீடியோ' வரை காத்திரு! 4

கதை: ஜே.எஸ்.ராகவன் சித்திரம்: செல்லம்
















இது சரி என்ன இந்தப் பக்கம்?
அனுமாரோட அப்பா இருக்காரே அவரோட கொஞ்சம் இருந்துட்டு வரலாமினு தான்.


வாட்? அனுமாரோட டாடியா?...எங்கே இருக்கார்? யார் அது?
வாயு, காத்து, தென்றல் அப்படின்னு அவருக்கு நிறைய 'அலியாஸ்' உண்டு.


ஓ!....நான் புராணம்னு அவுட் ஆயிடுவேன். ∴ பாண்டம்லே எக்ஸ்பெர்ட். சூப்பர்மான் பத்தி கேளுங்க சொல்லுவேன்.
ஜூஜி காத்து இதமா இல்லே? கோல்ஸ் கூட காத்து மாதிரி தான். சில சமயத்திலே தென்றல் சில சமயத்திலே புயல்... ஆனா எப்பவுமே வாயு! வாயுனு டிரபிள்தானே!


அப்போ கேர்ல்ஸைப் பாத்தா கண்ணை மூடிக்கிறது தானே... சுரேஷ்! சினிமா அடிக்கடி பாப்பியா?
நெறைய... தமிழ்நாடு தியேட்டர் உரிமையாளர்கள் சங்கம் எனக்கு இந்த வருஷம் ஷீல்டு தரப்போறாங்க.


எனக்கு சினிமாவை விட வீடியோ தான் பிடிக்கும்.
ரியலி! வீட்டிலே 'வீடியோ' வெச்சிருக்கியா?


இல்லை சுரேஷ். எது கேட்டாலும் வாங்கித் தரு என் அப்பா, கொஞ்ச நாளா 'வீடியோ'ன்னு காதிலே கேட்டாலே வெடிக்கிறார்.
ம்? அப்படியா? வீடியோனு அப்பா கூட தீவிரமா சிந்திக்க ஆரம்பிச்சுடறார். ஓகோ மிஸ்டர்... செக் பண்ணணும்.

தொடரும்

# ஒப்பனை

'தேவிபாலா'

அவள் வந்து நின்றபோது ராமுவுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

பக்கவாட்டில் திரும்பிப் பார்த்தபோது அம்மாவின் முகம் இருண்டு கிடந்தது.

உடன் வந்த அத்தையும் மன்னியும் ஒரு வித சங்கடத்தில் நெளிவது புரிந்தது.

திரும்பவும் அவளை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தான். வெண்மையான தொடையை வெளிச்சம் போட்டுக் காட்டிக் கொண்டிருந்த கறுப்பு நிற ஸ்கர்ட். மெல்லிய டாப்ஸில் என்னைப் பாரேன் எனும் ப்ரா, தோள்வரை வெட்டி விடப்பட்டிருந்த ஷாம்பூ கேசத்தின் மெல்லிய அழகு. இமைகளில் தடவப்பட்ட சாம்பல் நிறத்தில் ஒருவித அழைப்பு. உதடுகளைக் கவ்விக் கொண்டிருந்த சாயம்.

'ஹலோ, ஐ'ம் லதா!' சிரித்தபடி தன்னைத் தானே அறிமுகம் செய்தபடி அவனுக்கெதிரே கால் மேல் கால் போட்டபடி உட்கார்ந்தாள்.

அத்தை சட்டென எழுந்து வாசலுக்குப் போனாள். அம்மா, உட்காரவும் முடியாமல், போகவும் முடியாமல் கஷ்டப்படுவது தெரிந்தது. பார்வை அவனிடம் 'வேண்டாம்' என்றது.

''லதா, நீ உள்ளே போம்மா!'' புரிந்து கொண்ட அப்பா அவசரமாகப் பேசினார். ''வந்து... அது வந்து... மிஸ்டர் ராம்...'' இழுத்து நிறுத்தினார்.

''சொல்லுங்கோ....''

''குழந்தையோட கான்வெண்ட் படிப்பும் அந்த மட்டத்துச் சிநேகமும் கொஞ்சம் மாடர்னா ஆக்கியிருக்கு. போகப் போகச் சரியாயிடும்.''

''டாடி, ஐ ஹேட் திஸ்! இதென்ன வர்றவங்க, போறவங்க கிட்ட எல்லாம் அபாலஜி கேட்டுக்கிட்டு? வாட்ஸ் ராங் வித் திஸ். இது மாதிரி டிரஸ் பண்றது என்னவோ பெரிய க்ரைம் மாதிரி!''

''அஃப்கோர்ஸ் மிஸ் லதா! ஆனா கல்யாணம் முடிஞ்சுட்டா இதெல்லாம் அழகில்லே. அதுவரைக்கும் பரவாயில்லே.'' ராம் குறுக்கே வந்தான்.

''ஆங்கிலோ இண்டியன் பெண்கள்எல்லாம் இழுத்துப் போர்த்திட்டா நடக்கிறாங்க? அவங்க எல்லாம்– கல்யாணமே செஞ்சுக்கறதில்லையா?''

''நமக்குன்னு ஒரு பண்பாடு இருக்கில்லியா?''

''ஹெல் வித் தட்! இதெல்லாம் சொந்த சுதந்திரம். நான் என் இஷ்டம்போல்தான் இருப்பேன். அடுத்தவங்க உரிமைல நான் தலையிட்டா அப்ப என்னைத் தட்டிக் கேளுங்க. இதுக்கு விருப்பமிருந்தா நீங்க சம்மதிச்சாப் போறும்.''

''நாங்க போய் எழுதறோம். கொஞ்சம் யோசிக்கணும்!'' ராம் எழுந்துகொண்டான். வீட்டுக்குள் நுழைந்தபோது அத்தை பட்டாசாக வெடித்துத் தீர்த்தாள். ''அதென்ன திமிர்! உடம்புல பாதி தெரியறது. ஆளைத் தூணைப் பயமில்லே. ஏற்கனவே முழங்கால் வரைக்கும்தான். இதுல உட்கார்ற அழகு கால் மேல கால் போட்டுண்டு.... ஐயோ சகிக்கலே.''

''அவ உதட்டை மடிச்சு, தோளை ஒரு குலுக்கு குலுக்கினாளே! சிலுக்கு பிச்சை வாங்கணும்'' மன்னி சுவாரஸ்யமாக கமெண்ட் அடித்தாள்.

''என்னம்மா நீ எதுவுமே சொல்லலே!''

''அங்கே இருக்கறச்சே வேண்டாம்னு நான் தோணித்து. வெளிப்படையாப் பேசறதைப் பார்த்தாஒரு வெகுளித்தனம் தட்டுப்படறது. பேச்சில ஒரு பிடிவாதம் இருந்தாலும் உள் நுழைஞ்சு பார்த்தா குழந்தைத்தனமாத் தோணறது. போகப் போக மாத்திடலாமோன்னு இருக்கு. நீ என்னடா சொல்றே?''

''உனக்குச் சரியாப் பட்டா சரிம்மா!''

''டேய் திருடா! மன்னி சிலுக்குனு சொன்னப்பவே அத்தனை பல்லும் தெரியச் சிரிச்சியே, இப்ப நடிப்பைப் பாரு.''

அத்தையின் பேச்சு அவனுக்குத் தூரத்தில் கேட்டது. மானசீகமாக அந்தக் கண்ணாடிக் கன்னத்தைக் கவ்வும் முயற்சியில் இருந்தான்.

கிரஹப் பிரவேசம் முடிந்து அடுத்த பத்தாவது நிமிடத்தில் லுங்கி சட்டையோடு வெளிப்பட்டாள்லதா.



"ஓ.... டாமிட்! வழியில்லையேன்னு சடங்குக்காகப் புடவை கட்டினேன். வேர்த்து விறுவிறுத்துப் போச்சு." சோபாவில் ஆயாசமாகச் சாய்ந்தாள்.

சட்டையின் மேல் பட்டன் விடுபட்டு எதிரே இருப்பவர்களைச் சாய்த்துக் கொண்டிருந்தது இளமை. எதிரே இருந்த அண்ணுவால் அங்கு உட்கார முடியாமல் போனது.

ஆபீஸ் நண்பர்கள் ஒவ்வொருவராக வரத் தொடங்க லதா கொஞ்சமும் கவலையில்லாமல் அப்படியே இருந்தாள்.

அவர்களோடு சரி சமமாக அரட்டையடித்தாள். ஹெரால்ட் ராபின்ஸ் பற்றிப் பேசினாள். டெய்லரின் புதுக் கணவன் பற்றி விசாரித்தாள். மெக்ஸிகோ சலவைக்காரி ஜோக்கைச் சொல்லி வீடு அதிரச் சிரித்தாள்.

ராம் கூசிப்போனான்.

பேசும் கண்கள் மேயும் இடங்களைப் பார்த்துக் குன்றிப் போனான்.

தப்பான முடிவுக்கு வந்து விட்டோமோ என்று ஏதோ ஒன்று உள்ளுக்குள்ளே நமநமவெனப் பிடுங்கியது.

விருந்து முடிந்து போகும்போது ராமைத் தட்டிக் கொடுத்துவிட்டு ஒவ்வொருவராக நகர்ந்தார்கள்.

"கில்லாடிடா நீ! அருமையான மனைவியைக் கொண்டு வந்திருக்கே!"

அவமானத்தில் முகம் சிவந்து போனான் ராம். உள்ளுக்குள்ளே உடைந்து நொறுங்கினான்.

அவளைச் சொல்லித் திருத்த முடியாது என்று தோன்றியது. இது தெரிந்தே விழுந்த குழி. பேசாமல் இருப்பது நல்லது என்று தோன்ற மௌனத்தில் உறைந்து போனான் ராம்.

காலையில் எழுந்து மெல்லிய நைட்டியில் அவள் சோம்பல் முறித்தபடி வெளியே வந்தபோது ஆளுக்கு ஆள் பார்க்கச் சகிக்காமல் பதுங்கினார்கள்.

அவள் ஆபீஸ் போன பிறகுதான் பதுங்கிய தலைகள் அத்தனையும் வெளியே வந்தன.

"ராம், நாம் மானத்தோட தெருவுல வாழறதா. இல்லே, நாக்கைப் பிடுங்கிண்டு சாகிறதா, என்னடா பண்ணப் போறே?" அத்தை அவனை உலுக்காத குறையாகச் சீறினாள். "எதுடா நாகரீகம்? எல்லாத்துக்கும் ஒரு அளவு இருக்குடா. ஒரு பெண்ணை முழுமையாப் பாக்கற உரிமை அவளைக் கட்டினவனுக்கு மட்டுந்தாண்டா உண்டு. இவ உடம்பு ஊருக்கெல்லாம் காட்சிப் பொருளா மாறணுமா?"

அத்தையின் கேள்விகளுக்கு விடை அன்று மாலைக்குள் அவனுக்குக் கிடைத்தது.



"இப்ப ஊர் போனா எப்ப வருவீங்க ராம்?'' அவனது தோளில் தொங்கியபடியே கொஞ்சினாள் லதா.

''நாலஞ்சு நாள் ஆகும் ஏன்?''

''அதுக்கில்ல. வர்ற வெள்ளிக் கிழமை என் தோழிகள் எல்லாம் சேர்ந்து நமக்கு ஒரு விருந்து தர ஏற்பாடு பண்ணியிருக்காங்க. உங்களுக்கு ஒரு சபாரி ரெடி மேடா ஆர்டர் பண்ணியிருக்கேன். அதுக்குள்ள வந்துடுவீங்களா?''

''நீ முன்னாலே போய்விடு; நான் வந்து ஜாயின் பண்ணிக்கிறேன். ஓ.கே?''

''தவறாம வந்துடணும். உங்களை வரவேற்க என் தோழிகளோட வாசல்ல காத்துட்டு இருப்பேன்.''

**வெ**ள்ளிக் கிழமை.

ஆரஞ்சு வண்ணச் சுடிதாரோடு, புது வகை தலை அலங்காரமும் சேர, கையில் கோக் கிளாஸோடு சிரிக்கப் பேசிக் கொண்டிருந்தாள் லதா.

''என்னப்பா! உன் ஹப்பி ஏமாத்திட மாட்டாரே!'' ஒரு மிடி சந்தேகத்தோடு சிணுங்கியது.

''ஹே யூ! பாஸந்தி இன்னொரு கப் எடுத்துக்கறேன், ரொம்ப டேஸ்ட்டா இருக்கு!''

''இனியைக் கொஞ்சம் குறை. வேண்டாத இடங்கள்ளாம் வளர்ந்துட்டே போகுது'' — மற்றொரு நவநாகரிக மங்கையின் கமெண்ட்.

லதா ஒருவித அவஸ்தையில் அடிக்கடி மணிக்கட்டைப் பார்க்கத் தொடங்கினாள்.

''ஹலோ! ரொம்ப லேட்டாயிடுத்தா. ஸாரி!'' குரல் கேட்டுத் திரும்பிய லதா உறைந்தாள்.

'கொல்'லென்று எழுந்த சிரிப்பொலி அலையாகப் பரவி அந்தக் கூடத்தை நிறைத்தது.

அழுக்குப் படிந்த பஞ்ச கச்சம், சட்டை போடாத வெற்றுடம்பில் போர்த்திய உத்தரீயம், எண்ணெய் வழியும் முகத்தில் முன் முன்னாக மூன்று நாளைய தாடி, பிசிறு பிசிறாகச் சரியாகச் சீவாத தலையோடு கொஞ்சமாக அவிழ்ந்து தொங்கிய குடுமி, வாய் கொள்ளாமல் வெற்றிலை, உதட்டோரம் வழியும் சாறு.

''லதா, இவரா உன் கணவர்?''

''ஆமா, லதா சொல்லியிருப்பாளே! கோடி வீட்டு ஆடிட்டர்மாமாஇருக்காரே..'' பாதியில் நிறுத்தி மடியைத் தடவிப் பொடி டப்பியை எடுத்தான்.''அவாவீட்டுல நடந்த பூஜை, பஜனையிலே கலந்துண்டதிலே இங்கே வர நாழியாயிடுத்து.'' ஒரு சிட்டிகை பொடியை எடுத்து 'பர்'ரென்று உறிஞ்சி, கையோடு மூக்கைச் சிந்திச் சுவரில் பூசினான்.

''லதா, உன் வீட்டுக்காரர் இப்படி டிரஸ்....?''

''அதனால என்ன தப்பு? டிரஸ் போட்டுக்கறது சொந்த சுதந்திரம். அடுத்தவா சுதந்திரத்திலே குறுக்கே வரவே மாட்டா எங்க லதா, இல்லியா லதா?'' வழியும் சாற்றைக் கூடத் துடைக்காமல் கோணலாகச் சிரித்தான் ராம்.

சட்டென்று மார்பைக் கைகளால் மூடிக் கொண்டு வேகமாக வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினாள் லதா.

# கள்வனின் காதலி

## அத்தியாயம் 31

## காதலர் ஒப்பந்தம்

கோவிலுக்குப் பக்கத்தில் இருந்த மாமரத்தில் பட்டுப் போல் சிவந்த இளம் இலைகளுக்கு மத்தியில் கொத்துக் கொத்தாக மாம்பூக்கள் பூத்திருந்தன. அந்தப் பூக்கள் இருக்கும் இடம் தெரியாதபடி வண்டுகளும், தேனீக்களும் மொய்த்தன. அவற்றின் ரீங்கார சப்தம் அந்த வனப் பிரதேசம் முழுவதிலும் பரவிப் பிரகிருதி தேவியை ஆனந்த பரவசமாக்கிக் கொண்டிருந்தது.

சற்றுத் தூரத்தில் ஒரு முட்புதரின் மேல் காட்டு மல்லிகைக் கொடி ஒன்று படர்ந்திருந்தது. அந்தக் கொடியில் குலுங்கிய பூக்களிலிருந்து இலேசாக வந்து கொண்டிருந்த நறுமணத்தினால் கவரப்பட்டுத்தான் போலும், அதன் மேல் அத்தனை பட்டுப் பூச்சிகள் பறந்து கொண்டிருந்தன! அவற்றின் இறகுகளுக்குத்தான் எத்தனை விதமான நிறங்கள்! அவற்றில் எவ்வளவு விதவிதமான வர்ணப் பொட்டுக்கள்! நல்ல தூய வெள்ளை இறகுகளும், வெள்ளையில் கருப்புப் பொட்டுக்களும், ஊதா நிற இறகுகளில் மஞ்சள் புள்ளிகளும், மஞ்சள் நிற இறகுகளில் சிவப்புக் கோலங்களும் — இப்படியாக ஒரே வர்ணக் காட்சிதான்! பிரம்மதேவன் இந்தப் பட்டுப்பூச்சிகளைச் சிருஷ்டித்த காலத்தில் விதவிதமான வர்ணங்களைக் கலந்து வைத்துக் கொண்டு அவற்றை விசித்திரம் விசித்திரமாகத் தீட்டி வேடிக்கை செய்திருக்க வேண்டும்.

பட்டுப்பூச்சிகள் ஒரு நிமிஷம் அந்தக் காட்டு மல்லிகைக் கொடியின் மீது உட்கார்ந்திருக்கும். அடுத்த நிமிஷம் ஒரு காரணமுமின்றி அவை கொல்லென்று கிளம்பி வான வெளியிலெல்லாம் பறக்கும். அவை பறக்கும்போது, அவற்றின் இறகுகள் படபடவென்று அடித்துக்கொள்வதைப் பார்த்தால் "ஐயோ! இந்த அழகான பூச்சி இப்படித் துடிக்கின்றதே! அடுத்த கணத்தில் கீழே விழுந்து உயிரை விட்டு விடும் போலிருக்கிறதே!" என்று நாம் தவித்துப்போவோம்.

பட்டுப் பூச்சியின் இறகுகள் எப்படித் துடித்தனவோ, அதைப் போலவே துடித்தது அந்த நேரத்தில் கல்யாணியின் இருதயம் என்று சொல்லலாம். பாழடைந்த கோவிலைச் சுற்றி அடர்த்தியாயிருந்த செடி கொடிகளை விலக்கிக் கொண்டு முத்தையன் வருவதை அவள் பார்த்தாள். பார்த்த கணத்தில் அவளுடைய உள்ளம் ஆனந்த பரவசம் அடைந்தது. ஆனால் அடுத்த கணம், முன்போல் அவன் மறுபடியும் தன்னைப் பார்த்துவிட்டு ஓடிப்போகாமலிருக்க வேண்டுமே என்று எண்ணிய



போது அவளுடைய இருதயம் மேற் சொன்னவாறு துடிதுடித்தது.

✻ ✻ ✻

அன்றிரவு, முகமூடி தரித்த கள்வனாய் வந்த முத்தையன் அப்படி ஒரே நிமிஷத்தில் மாயமாய் மறைந்துபோன பிறகு கல்யாணி அடைந்த ஏமாற்றத்துக்கும் ஏக்கத்துக்கும் அளவே கிடையாது. அவ்வாறு நேர்ந்துவிட்டதற்குக் காரணம் தன்னுடைய புத்தியீனம்தான் என்று அவள் கருதினாள். இத்தனை நாளும் அவனைப் பார்க்கலாம் பார்க்கலாம் என்ற நம்பிக்கையில் ஒருவாறு காலம் போய் விட்டது. இனிமேல் அந்த நம்பிக்கைக்குக்கூட இடமில்லையே? முத்தையன் இப்படியே திருடனாயிருந்து ஒரு நாள் போலீஸாரிடம் அகப்பட்டுக் கொண்டு தண்டனையடைய வேண்டியது; தான் இப்படியே தன்னந் தனியாக உலகத்தில் வாழ்ந்து காலம் தள்ள வேண்டியது என்பதை நினைக்க நினைக்க அவளால் சகிக்கமுடியவில்லை. இதற்கு முன்னெல்லாம் அவள் சாதாரணமாய்க் கண்ணீர்விட்டு அழுவது கிடையாது. பஞ்சநதம் பிள்ளையைக் கல்யாணம் செய்து கொண்டபோது அவள் தன்னுடைய நெஞ்சை இரும்பாகச் செய்து கொண்டாள் என்றுபார்த்தோமல்லவா? ஆனால் அன்றிரவு சம்பவத்துக்குப் பிறகு அவளுக்குத் தன்னை யறியாமல் அழுகை அழுகையாய் வந்தது.



கல்யாணியின் அத்தை இதையெல்லாம் பார்த்துவிட்டுப் பயந்து போனாள். அன்று இராத்திரியே அவள் கூச்சல் போட்டுத் தடபுடல் பண்ணித் திருடனைப் பிடிக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று சொன்னாள். கல்யாணி அதெல்லாம் கூடவே கூடாதென்று பிடிவாதமாகச் சொல்லி விட்டாள். அதற்குப் பிறகு கல்யாணி தானே அழுது கொண்டும் கண்ணீர் விட்டுக் கொண்டும் இரவு எல்லாம் தூங்காமல் புரண்டு கொண்டும் இருப்பதைப் பார்த்து, அத்தை, ''அடி பெண்ணே! உனக்கு என்னமோ தெரியவில்லை. அன்று ராத்திரி திருடன் வந்ததிலிருந்து பயந்து போயிருக்கிறாய். மாரியம்மனுக்கு மாவிளக்கு ஏற்றவேண்டும். கொஞ்ச நாளைக்குப் பூங்குளத்துக்குப் போய் எல்லாருடனும் கலகலப்பாய் இருந்துவிட்டு வருவோம், வா! அப்போதுதான் உனக்குப் பயம் தெளிந்து சித்தம் சரியாகும்'' என்றாள்.

✻ ✻ ✻

பூங்குளத்துக்குப் போகலாம் என்றதும் அத்தை ஆச்சரியப்படும்படியாகக் கல்யாணி உடனே சம்மதித்தாள். அவளுக்கு என்னவெல்லாமோ பழைய ஞாபகங்கள் வந்தன. கொள்ளிடக் கரைக் காடும், பாழடைந்த கோவிலும் அவளைக் கவர்ந்து இழுத்தன. ஆகவே தகப்பனாருக்குக் கடிதம் போட்டு வரவழைத்து எல்லோருமாகப் பூங்குளம் போய்ச் சேர்ந்தார்கள்.

கல்யாணி இரண்டொரு நாள் வீட்டுக்குள்ளேயே இருந்தாள். பிறகு இடுப்பில் குடத்தை எடுத்து வைத்துக்கொண்டு ஆற்றுக்குக் குளிக்கப் போகிறேன் என்று கிளம்பினாள்.

அவள் சிறு பெண்ணாயிருந்த காலத்தி லேயே அவளை யாரும் எதுவும் சொல்ல முடியாதென்றால், இப்போது பெரிய பணக்காரியாய், சர்வ சுதந்திர எஜ மானியாய் ஆகிவிட்டவளை யார் என்ன சொல்ல முடியும்?

* * *

முத்தையனை இப்போது பார்த்த தும் கல்யாணி எழுந்து நின்றாள். இரு வரும் ஒருவரை யொருவர் பார்த்த வண்ணம் சற்று நேரம் பிரதிமைகளைப் போல் நின்றார்கள். கல்யாணிக்கு எதிர் பாராமல் அவனைச் சந்தித்ததினால் ஏற் பட்ட திகைப்பு ஒரு புறம்; ஏதாவது தான் தவறாகச் சொல்லி அல்லது செய்து, அதனால் மறுபடியும் முத் தையன் போய்விடப் போகிறானே என்ற பயம் இன்னொருபுறம்.

ஆனால் முத்தையன் இந்தத் தடவை அப்படி யொன்றும் ஓடிப்போகிறவனா யில்லை. திகைப்பு சற்று நீங்கியதும், கல்யாணியின் சமீபமாக வந்தான்.

''கல்யாணி! நீதானா? அல்லது வெறும் மாயைத் தோற்றமா? என்னால் நம்ப முடியவில்லையே?'' என்றான்.

''அம்மாதிரிச் சந்தேகம் உன்னைப் பற்றி எனக்கு உண்டாவதுதான் நியா யம். இந்த நிமிஷம் நீ என் முன் இருப் பாய்; அடுத்த நிமிஷம் மாயமாய் மறைந்துபோவாய்!'' என்று கல்யாணி சொல்லி, சட்டென்று அவன் போகா மல் தடுப்பவள் போல் கைகளை விரித் துக்கொண்டு நின்றாள்.

முத்தையன் கலகலவென்று சிரித் தான். கல்யாணிக்குத் தன்னையறியா மல் சிரிப்பு வந்தது. இருவரும் சிரித் தார்கள். எத்தனையோ காலமாகச் சிரிக் காதவர்களாதலால், இப்போது அதற் கெல்லாம் சேர்த்து வைத்துக் குலுங் கக் குலுங்கச் சிரித்தார்கள். அந்தச் சிரிப்பின் ஒலியைக் கேட்டு, நாவல் மரத் தின் மேல் கூட்டிற்குள் இருந்த குருவிக் குஞ்சுகள் வெளியே தலையை நீட்டி, பயம் நிறைந்த சின்னஞ் சிறு கண் களால் அவர்களைப் பார்த்து விழித்தன.

முத்தையன் சிரிப்பைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு, ''கல்யாணி! என் னால் நம்ப முடியவில்லைதான். எதற் காக நீ இங்கே வந்தாய்? பழைய முத் தையனைத் தேடிக் கொண்டா? அந்த முத்தையன் இப்போது இல்லையே! கொள்ளைக்கார முத்தையன் அல்லவா இப்போது இருக்கிறான்? அவனுக்கும் உனக்கும் நடுவில் இப்போது இந்தக் கொள்ளிடத்தை விட அகண்டமான பள்ளம் ஏற்பட்டு விட்டிருக்கிறதே!'' என்றான்.

''முத்தையா! நானும் இப்போது பழைய கல்யாணி அல்ல; காட்டில் குதூகலமாய்த் திரிந்து கொண்டிருந்த 'வனதேவதை கல்யாணி' செத்துப் போய் விட்டாள். இப்போது இருப்ப வள் கைம்பெண் கல்யாணி.''

''ஐயோ! நிஜமாகவா! அந்தப் பாவி இதற்குத்தானா உன்னைக் கல் யாணம் செய்து கொண்டான்?'' என்று திடுக்கிட்டுக் கேட்டான் முத்தையன்.

''அவரை ஒன்றும் சொல்லாதே முத் தையா! அவர் புண்ணிய புருஷர். அவரைப் போன்றவர்கள் சிலர் இந்த உலகத்தில் இருப்பதால்தான் இன்னும் மழை பெய்கிறது.''

''புருஷனிடம் அவ்வளவு பக்தியுள்ள வள் இங்கு ஏன் வந்தாய், இந்தத் திருடனைத் தேடிக் கொண்டு'' என்று முத்தையன் ஆங்காரமாய்க் கேட்டான்.

கல்யாணியின் கண்களில் கலகல வென்று ஜலம் வந்தது. முத்தையன் மனம் உருகிற்று. ''கல்யாணி! நான் சுத்த முரடன். 'முரட்டு முத்தையன்' என்ற பெயர் எனக்குத் தகும். உன்னைக் காணாதபோது ஒவ்வொரு நிமிஷமும் உன்னைப் பற்றியே நினைத்துக் கொண் டிருந்தேன். 'இந்த ஜன்மத்திலே காண் போமா' என்று துடிதுடித்துக் கொண் டிருந்தேன். ஆனால் உன்னைப் பார்த்த பிறகு முரட்டுத்தனமாய்ப் பேசி உன்

## தேர்தல் தமாஷ்!

ஆந்திராவில் தர்மாவரம் தொகுதியில் சிக்கர்லா என்ற கிராமத்தில் ஒரு அதி சயம் நடந்தது. அங்கு கொண்டா ரெட்டி என்பவர் ஓட்டுப் போடப் போனார். ஆனால் வாக்காளர் பட்டிய லில் அவரது பெயர் 'கொண்டம்மா' என்று இருந்தது. 'இது பெண் பெயர்' என்று காரணம் காட்டி அவரை ஓட்டுப் போட அனுமதிக்கவில்லை! அந்த நபர் உடனே வீட்டுக்குப் போய் ஒரு புட வையைக் கட்டிக் கொண்டு ரவிக்கை யும் போட்டுக் கொண்டு வந்தார்! அப் போது அவருக்கு அனுமதி கிடைத்தது!

—அனிதா ராமச்சந்திரன்





ராமலிங்க சுவாமிகளின் ஒன்பதாவது வயதில் அவரது பள்ளி ஆசிரியர்

''ஓதாமல் ஒரு நாளும்
இருக்க வேண்டாம்
ஒருவரையும் பொல்லாங்கு
சொல்ல வேண்டாம்''

எனச் சொல்லச் சொன்னார். வள்ளலார் மௌனமாயிருந்தார். ''ஏன் சொல்லவில்லை'' என்று ஆசிரியர் கேட்டபோது, ''இறைவனிடத்தில் வேண்டாம் வேண்டாம் என்று சொல்லிக் கொண்டிருப்பானேன்? ஏதாவது வேண்டும்; வேண்டும் என்று கேட்கலாமே என எண்ணிக் கொண்டிருந்தேன்'' என்றார்.

''நீ வேண்டுமானால் வேண்டும்வேண்டும் எனப் பாடேன்'' என்று ஆசிரியர் கட்டளையிட உடனே ''ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற உத்தமர் தம் உறவு வேண்டும்; உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவோர் உறவு கலவாமை வேண்டும்'' என்ற பாடலைப் பாடினார் ராமலிங்கர்.

—சி. வி. கே. ராஜமாணிக்கம்,

ஆதாரம்: கி. ஆ. பெ. விசுவநாதம் சொற்பொழிவு.

கண்களில் ஜலம் வரச் செய்கிறேன். என்னால் உலகத்தில் எல்லோருக்கும் கஷ்டம்தான். எதற்காக இந்த உலகில் பிறந்தோம் என்று சில சமயம் தோன்றுகிறது.''

''எதற்காகப் பிறந்தாய்? இந்தத் தாயில்லாப்பெண் கல்யாணியின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளத்தான் பிறந்தாய். முத்தையா! வாழ்க்கையில் ஒரு தடவை நாம் பெரிய பிசகு செய்துவிட்டோம். கடவுள் நம் இருவருடைய இதயத்தையும் ஒன்றாகச் சேர்த்து வைத்தார். அதற்கு விரோதமாக இருவரும் ஆத்திரத்தினாலும் பிடிவாதத்தினாலும் காரியம் செய்தோம். மறுபடியும் அம்மாதிரித் தப்பு செய்ய வேண்டாம். நான் சொல்வதைக்கேள். இப்படி வெகு காலம் உன்னால் காலம் கழிக்க முடியாது. கட்டாயம் போலீஸார் ஒரு நாள் பிடித்தே விடுவார்கள். கொஞ்ச நாள் அடக்கமா யிருந்து விட்டு, கலவரம் அடங்கியதும் கப்பலில் ஏறி அக்கரைச் சீமைக்குப் போய்விடு. சிங்கப்பூர், பினாங்கு எங்கேயாவது கண்காணாத தேசத்துக்குப் போய்ச் சௌக்கியமா யிருக்கலாம்....''

முத்தையன் மறுபடியும் திடுக்கிட்டான். தன் மனத்தில் இருந்ததையே அவளும் சொன்னதைக் கேட்டு அவன் வியப்படைந்தான். ஆனால் அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், ''கல்யாணி! என்னை ஊரை விட்டு ஓட்டுவதில்தான் உனக்கு எவ்வளவு அக்கறை?'' என்றான்.

''இன்னும் என்னை நீ தெரிந்து கொள்ளவில்லையா முத்தையா! உன்னை மட்டுமா போகச் சொல்கிறேன் என்று நினைக்கிறாய்? நீ முதல் கப்பலில் போனால் நான் அடுத்த கப்பலில் வருவேன்.''

''நிஜமாகவா கல்யாணி! இன்னொரு தடவை சொல்லு. இவ்வளவு சொத்து சுதந்திரம், வீடு வாசல், ஆள் படை எல்லாவற்றையும் விட்டு விட்டு இந்தத் திருடனுடன் கடல் கடந்து வருகிறேன் என்று சொல்கிறாய்?''

''ஆமாம். இவை யெல்லாவற்றையும் விட நீதான் எனக்கு மேல். இந்தச் சொத்துக்களையெல்லாம் பண்ணையாரின் விருப்பத்தின்படி நல்ல தர்மங்களுக்கு எழுதி வைத்து விடுவேன். போகிற இடத்தில் நாம் உழைத்துப் பாடுபட்டு ஜீவனம் செய்வோம்.''

''மறுபடியும் நீதானே எனக்காகத் தியாகம் செய்கிறாய், கல்யாணி! நான் என்னவெல்லாமோ எண்ணியிருந்தேன்! கொள்ளையடித்த பணத்தையெல்லாம் ஒரு நாள் உன் காலடியில் போடவேணுமென்று நினைத்தேன். ஆனால் நீயோ குபேர சம்பத்தைக் காலால் உதைத்துத் தள்ளிவிட்டு வருகிறேன் என்கிறாய். ஆனால் முன் தடவை மாதிரி இந்தத் தடவை நான் பிடிவாதம் பிடிக்க மாட்டேன். கப்பலேறிப் போய்விட நான் தயார். ஆனால் அதற்கு முன்னால் நான் ஒப்புக்கொண்ட காரியம் ஒன்றை மட்டும் செய்துவிட வேண்டும். சென்னைப் பட்டணத்துக்குப் போய் அபிராமியை ஒரு தடவை பார்த்துவிட வேண்டும். அதற்கு ஏற்பாடெல்லாம் செய்து விட்டேன். கல்யாணி! ஒரு மாதம் இரண்டு மாதம் பொறுத்துக்கொள்....''

''ஐயையோ! அவ்வளவு நாளா? அதற்குள் அபாயம் நேர்ந்து விட்டால் என்ன செய்வது?''

''இல்லை கல்யாணி! ரொம்ப ஜாக்ரதையா யிருப்பேன். நேற்று வரை



**ஏதாவதொரு மிக்ஸரை வாங்கிவிடாதீர்கள்**
**... உங்கள் தேவைக்கேற்றது ஸுமீத்**

OBM/8869/TM

அற்புதமான ஸுமீத்! இதன் வகையில் இந்தியாவிலேயே முதலாவது. நாடெங்கிலும் மேன்மேலும் அதிக இல்லத்தரசிகளுக்கு வியப்பூட்டி வருகிறது.

ஸுமீத்தில் மட்டுமே, எல்லா வேலைகளுக்கும் பயனுறும், விசேஷமாக வடிவமைக்கப்பட்ட, பல-பயனுள்ள ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஜாடி. அதன் மீது உள்ளே பார்க்கக் கூடிய அக்ரிலிக் மூடி. எனவே ஸுமீத் இயங்குவதைக் கண்ணெதிரில் காணலாம்.

பல்வேறு வேலைகளை விரைவிலும் எளிதிலும் செய்து முடிக்க. இப்போது இதில் 4 அலகு அமைப்பு பாகங்கள் :

ஈரப் பண்ட அரைவைக்காக.
உலர் பண்ட அரைவைக்காக.
கடைய, கலக்க, சாறு பிழிய.
மாமிசத்தை அரிக்க.
காய்கறிகளை நறுக்க.

இவை மட்டுமா? ஸுமீத்தில் 30 நிமிடங்கள் வரை நிற்காமல் ஓடக்கூடிய ஹெவி ட்யூட்டி மோட்டார்.

அற்புதமான ஸுமீத் ஒன்றுதான் முழுமையான கிட்சன் மெஷின். இதை அடைய எத்தனை நாள் வேண்டுமானாலும் காத்திருக்கலாம்.



**ஈர அரவை—** வடை, இட்லி, தோசைக்காக உளுத்தம் பருப்பு மற்றும் அரிசியை அரைக்க 3½ நிமிடங்களில்.

**உலர் அரவை—** எல்லாவித மசாலாக்கள், மிளகாய் வற்றல், மிளகு, மஞ்சள், கொத்துமல்லி விதை ஆகியவற்றை அரைக்க.





**பொடிக்க—** 1 நிமிடத்தில் மாமிசத்தை பொடிக்க, காரெட், வெங்காயம், தேங்காய் மற்றும் கொட்டைகளை நறுக்க— விநாடிகளில்.

**அரைக்க—** 2 நிமிடங்களில் தேங்காய் சட்னி அரைக்கலாம் அல்லது விநாடிகளில் கொத்துமல்லிச் சட்னி அரைக்கலாம்.





**கடைய—** லஸ்ஸி, மில்க் ஷேக் ஆகியவற்றை ஒரே நிமிடத்தில் தயாரிக்க அல்லது நிமிடங்களில் மயோன்னைஸ் தயாரிக்க. வீட்டிலேயே வெண்ணெய் கடையலாம்.

**விருப்பத் தேர்வு : ஒப்பற்ற நீடிங் இணைப்பு**



மாவு பிசைய— சப்பாத்தி, பூரி, நான் தயாரிக்க 2 நிமிடங்களில் மாவு பிசையலாம். கேக் மாவை மிகவும் சன்னமாகப் பிசையலாம்— 3½ நிமிடங்களில்.

# ஸுமீத்®

## உங்கள் முழுமையான கிட்சன் மெஷின்

அற்புதமான ஸுமீத் பரவலாகப் பல்வேறு பணிகளைச் செய்கிறது- மற்ற எல்லா வீட்டுபயோக மிக்ஸர்களைவிடச் சிறப்பாக. எப்போது நாங்கள் இலவசமாக இயக்கிக் காட்டுகிறோம் என்பதைக் கவனித்து வாருங்கள். உங்களுக்கெனவே ஸுமீத் சிறப்பாக இயங்குவதைக் காணுங்கள்!

தயாரிப்பாளர்கள் : பவர் கண்ட்ரோல் அண்ட் அப்ளையன்ஸஸ் கம்பெனி
F/11 இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை 600 058 இந்தியா, போன் : 633340

சர்வீஸ் செண்டர்கள் :
சென்னை : ரெப்ரஜிரேட்டர்ஸ் & என்ஜினியர்ஸ், தொலைபேசி : 445700/442055 ● விவேக் ஏஜென்சீஸ், தொலைபேசி : 76923/75661 ● விவேக் & கம்பெனி, தொலைபேசி 444129 ● விவேக் & கம்பெனி, தொலைபேசி : 663545 ● வி. ஜி. பன்னீர்தாஸ் & கம்பெனி, தொலைபேசி : 812121/88184.
மதுரை : ஜே. என்ஜினியரிங் கார்ப்பரேஷன், தொலைபேசி : 24028.
கோயம்புத்தூர் : ஜே. என்ஜினியரிங் கார்ப்பரேஷன், தொலைபேசி : 24579/25566.
திருச்சி : ஸ்டாண்டர்ட் எலெக்ட்ரிக் கம்பெனி, தொலைபேசி : 24343.

இந்த உயிர் எனக்கு இலட்சியமில்லாமல் இருந்தது. சாவை எதிர்நோக்கிக் கொண்டிருந்தேன். ஆனால் இன்று உன்னைப் பார்த்த பிறகு இத்தனைக்குப் பிறகும் உன்னுடைய அன்பு மாறவில்லை என்று தெரிந்த பிறகு, இந்த உயிர்மேல் எனக்கு ஆசை பிறந்து விட்டது. வெகு ஜாக்கிரதையா யிருப்பேன்'' என்றான்.

## அத்தியாயம் 32
## கவிழ்ந்த மோட்டார்

அஸ்தமித்து ஒரு நாழிகை இருக்கும் மேற்குத் திசையில் நிர்மலமான வானத்தில் பிறைச் சந்திரன் அமைதியான கடலில் அழகிய படகு மிதப்பது போல் மிதந்து கொண்டிருந்தது. வெள்ளித் தகட்டினால் செய்து நட்சத்திரங்களுக்கு மத்தியில் பதிந்த ஓர் ஆபரணம்போல் விளங்கிய அப் பிறைமதி அழகுக்காக ஏற்பட்டது என்றே தோன்றும்படி, அதன் வெளிச்சம் அவ்வளவு சொற்பமா யிருந்தது. ஆனால் அதுகூட அதிகமென்று நினைத்து, எப்போது அந்த இளம் பிறை, அடிவானத்தில் மறையு மென்று கவலையுடன் எதிர் பார்த்த சில பிரகிருதிகள் இருக்கத்தான் செய்தார்கள். புதுச்சேரிக்குச் சமீபத்தில் ஏழெட்டு மைல் தூரத்தில் வயல் காடுகளின் வழியாக ஊர்ந்து வந்து கொண்டிருந்த ஒரு மோட்டார் வண்டியில் இவர்கள் இருந்தார்கள். அந்த வண்டி சிகப்புச் சாயம் பூசப்பட்ட வண்டி. அதற்கு நம்பர் பிளேட் கிடையாது. அதனுடைய முன் விளக்குகள் மங்கலாக எரிந்தன. வண்டி கிளம்பி அரை மணி நேரமாகியிருந்தும், இதுகாறும் ஒரு தடவை கூட டிரைவர் அதன் ஹாரனை உபயோகப்படுத்தவில்லை.

வண்டியில் இருந்த நாலு பேரில் முத்தையனும் ஒருவன். அவன் கையில் ஒரு சுழல் துப்பாக்கி இருந்தது. அவன் அதைத் தயாராய்க் கையில் பிடித்துக் கொண்டு வண்டிக்குப் பின்புறமே பார்த்துக் கொண்டு வந்தான். பின்னால் போலீஸ் வண்டி தொடர்ந்து வந்தால் அதை நோக்கிச் சுட வேண்டும் என்பது அவனுக்கு உத்தரவு.

விதி என்றும், தலையெழுத்து என்றும் பூர்வ ஜன்ம கர்மம் என்றும் சொல்கிறார்களே, அதிலெல்லாம் ஏதோ உண்மை இருக்கத்தான் வேண்டும். இல்லையெனில் கல்யாணியைப் பார்த்த பிறகு, அவளுடைய அழியாத காதலை அறிந்த பிறகு முத்தையனுக்கு இந்தக் காரியத்தில் ஈடுபட ஏன் புத்தி தோன்றுகிறது?

* * *

பிறைச் சந்திரன் மறையும் தருணத்தில், இதுகாறும் காடு மேடுகளில் வந்து கொண்டிருந்த அந்த மோட்டார் நல்ல சாலையை அடைந்தது. அந்த இடத்தில் அச்சாலை ஒரு பெரிய ஏரியின் கரை மீது அமைந்திருந்தது. ஏரியில் ஜலம் நிறைந்து அலை மோதிக் கொண்டு காணப்பட்டது. சுமார் அரை மைல் தூரம் சாலை இப்படி ஏரிக் கரையோடு போய், அப்பால் வேறு பக்கம் திரும்பிச் செல்கிறது.

மோட்டார் அச்சாலையில் ஏறியதும் டிரைவர் வண்டியின் 'ஆக்ஸிலேட்டர்'ரைக் காலால் ஒரு மிதி மிதித்தான். வண்டி பிய்த்துக் கொண்டு கிளம்பிற்று. ''இனி அபாயமில்லை'' என்று எண்ணி வண்டியில் இருந்தவர்கள் பெருமூச்சு விட்டார்கள். முத்தையன் கூட ரிவால்வரின் பிடியைச் சிறிது தளர்த்தினான்.

திடீரென்று, ''ஹால்ட்'' என்ற ஒரு சத்தம் கேட்டது. பல போலீஸ் விளக்குகளின் வெளிச்சம் சுளீரென்று மோட்டாரின் மேல் விழுந்தது. சாலை ஏரிக் கரையிலிருந்து திரும்பும் இடத்தில் இருபது முப்பது போலீஸ்காரர்கள் எழுந்து நின்றார்கள். அதே சமயம்

### லாட்டரி பரிசு 52 கோடி ரூபாய்...

ஸ்பெயின் நாட்டில் கிருஸ்துமஸ் தினத்தை யொட்டி மாபெரும் லாட்டரி குலுக்கல் நடந்தது. இதன் மொத்த பரிசுத்தொகை 364 கோடி ரூபாய். முதல் பரிசு 51 கோடியே 90 லட்சம் ரூபாய். ஸ்பெயின் நாட்டின் காடிஸ் பகுதியைச் சேர்ந்த சில டெலிபோன் ஊழியர்கள் கூட்டாகச் சேர்ந்து வாங்கிய கூட்டணி சீட்டுக்கு பரிசு கிடைத்தது. உலகிலேயே இதுதான் மிகப்பெரிய லாட்டரி குலுக்கல்.

-ராஜேஸ்வரி

ஆதாரம்: டைம்ஸ் ஆப் இந்தியா



பின்னுலிருந்து ஒரு மோட்டார் அதிவேகமாக வரும் சத்தம் கேட்டது. வண்டிக்குள், ''நிறுத்தாதே விடு'' என்று ஒரு உத்தரவு பிறந்தது. டிரைவர் 'ஆக்ஸிலேட்ட'ரை இன்னும் ஒரு அழுத்து அழுத்தினன். வண்டி பாய்ந்து கொண்டு புறப்பட்டது.

''ஷூட்'' என்று ஒரு பெருங்குரல் அப்போது கிளம்பிற்று. அநேக துப்பாக்கிகளிலிருந்து ஏக காலத்தில் குண்டுகள் கிளம்பின. முத்தையன் சுட்டான். ஆனுல் ஒரு தடவை அவன் விசையை இழுத்துவிட்டு இன்னெரு தடவை இழுப்பதற்குள்ளே எங்கேயோ அதல பாதாளத்தில் தான் விழுந்து கொண்டிருப்பதை உணர்ந்தான்.

போலீஸ்காரர்களுடைய குண்டுகளில் ஒன்று மோட்டாரின் டயரில் பட்டு, டயர் கிழிந்தது. வண்டி ஒரு திரும்புத் திரும்பி ஏரியை நோக்கிச் சென்றது. இது ஒரு விநாடி. அடுத்த விநாடி வண்டி தண்ணீரில் தலை கீழாக விழுந்து முங்கியே போயிற்று.

❋ ❋ ❋

முத்தையன் ஒரு கணம் திக்குமுக்காடினன். அடுத்த கணத்தில் நிலைமை இன்னதென்பதை ஒருவாறு உணர்ந்தான். மோட்டாருடன் தண்ணீரில் மூழ்கியிருக்கிறோம் என்பது அவனுக்கு ஞாபகம் வந்ததும், ''சரி, பிழைத்துக் கொள்ளலாம்'' என்று அவனுக்குத் தைரியம் வந்தது. தண்ணீர் என்பது அவனுக்குத் தாயின் மடியைப் போல் அவ்வளவு பிரியமானதல்லவா?

காலாலும் கையாலும் துழாவி, மோட்டாரின் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான். மெதுவாகத் தலையைச் சிறிதளவு தண்ணீரின் மேல் உயர்த்தினன். அநேக போலீஸ்காரர்கள் கையில் விளக்குகளுடனும், துப்பாக்கிகளுடனும் சாலையிலிருந்து ஏரிக் கரைக்கு ஓடி வருவது தெரிந்தது. உடனே மறுபடியும் தண்ணீரில் மூழ்கி உத்தேசமாகக் கரையோரமாகவே போகத் தொடங்கினன். மூச்சு நின்ற வரையில் அவ்வாறு போன பிறகு தலையை மறுபடி தூக்கினன். வண்டி விழுந்த இடத்தில் ஏக அமர்க்களமாக இருந்தது. வண்டியைத் தூக்கிக் கரையேற்றிக் கொண்டிருந்தார்கள்.

இவன் தப்பித்துக் கொண்டு சென்றதை யாரும் கவனிக்கவில்லையென்று தெரிந்தது. கவனித்திருந்தால் இதற்குள் தடபுடல் பட்டிராதா? ஏரிக் கரையோரமாகப் போலீஸார் ஓடி வர மாட்டார்களா? மோட்டாரில் எவ்வளவு பேர் இருந்தார்கள் என்பது போலீஸாருக்குத் தெரிந்திராது. தன்னுடைய சகபாடிகள் சொல்லா விட்டால் அவர்களுக்குத் தான் தப்பிப் போனது தெரியவே நியாயமில்லை.

துரதிர்ஷ்டத்திலும் தனக்குக் கொஞ்சம் அதிர்ஷ்டம் இருப்பதாக எண்ணிக்கொண்ட முத்தையன் மறுபடியும் தண்ணீரில் மூழ்கிக் கரையோரமாகவே சென்ருன். மோட்டார் விழுந்த இடத்திலிருந்து சுமார் அரை மைல் தூரம் சென்ற பிறகு ஏரிக் கரையில் புதர்கள் அடர்ந்திருந்த ஓர் இடத்தில் கரை யேறினன். துணிகளைப் பிழிந்து உலர்த்திய வண்ணம் ஏரிக் கரையோடு நடக்கலானன்.

❋ ❋ ❋

இராத்திரி சுமார் ஒரு மணி இருக்கும். கொஞ்ச தூரத்தில் ரயில் சத்தம் கேட்கவே, முத்தையன் அந்தத் திசை நோக்கி நடந்தான். சித்திரை மாத மாகையால் அவனுடைய துணிகள் எல்லாம் அதற்குள் நன்ருய் உலர்ந்துவிட்டன. அவனுக்கு என்னமோ அப்போது வெகு உற்சாகமாக இருந்தது. அவ்வளவு பெரிய துர்ச் சம்பவம் நடந்துங்கூடத் தான் மட்டும் தப்பி வந்ததை நினைக்குங்கால், அவனுக்குத் தன்னிடம் ஏதோ ஒரு அற்புத சக்தி இருப்பதாகவே தோன்றிற்று. ஆகையால் அவனுடைய தைரியமும் துணிச்சலும் அதிகமாயின.

சமீபத்தில் கை காட்டி மரத்தின் சிகப்பு வெளிச்சம் தெரிந்தது. அதை நோக்கி முத்தையன் சென்ருன். அவன் ஸ்டேஷனை அடைந்ததும், சென்னைக்குப் போகும் ரயில் வந்து நின்றதும் சரியாய் இருந்தன. நல்ல வேளையாய் அவன் இடுப்பில் கட்டியிருந்த பணப்பை பத்திரமா யிருந்தது. சென்னைக்கு ஒரு டிக்கட் எடுத்துக் கொண்டு ரயில் ஏறினன். அவன் ஏறிய வண்டியில் ஒரே கூட்டம். அத்துடன் பாட்டும் கூத்தும் பிரமாதப்பட்டன. அவ்வண்டியில் இருந்தவர்களுடைய நடை உடை பாவனைகள் எல்லாமே சிறிது விசித்திரமா யிருந்தன. முத்தையன் தன் பக்கத்திலிருந்தவனுடன் பேச்சுக் கொடுத்தான். அவர்கள் ஒரு பிரபல நாடகக் கம்பெனியைச் சேர்ந்தவர்களென்றும், சென்னையில் நாடகம் நடத்துவதற்காகப் போகிருர்கள் என்றும் தெரிந்து கொண்டான்.

(தொடரும்)

# இவற்றைப்பா

ஆரவாரமின்றி, நற்பணியாற்றும் பத்திரிகைகள் தமிழில் பல உண்டு. அவற்றில் சிலவற்றின் இதழ்களைப் புரட்டினோம்:

## இங்கும் அங்கும்
## INGUM ANGUM

பதினாறு பக்கங்களில் — ஐம்பது காசு விலையில் அமைந்த மாத இதழ். சில பக்கங்கள் ஆங்கிலத்தில். தமிழ்ப் பக்கங்கள் முழுவதிலும் சங்க கால தூய தமிழ் நடையினைக் காணலாம். 'இது ஒரு மாதப் பத்திரிகை' என்பதை அறிவிக்க, 'இது மாதிகை' எனக் குறிப்பிட்டுள்ளார்கள். செயற்கை இதயம், புற்று நோய், பற்றிய மருத்துவப் பகுதிகளோடு. ''தஞ்சாவூர் எப்போது தண்செய்யூர் ஆகும்'' என்ற பெயர் ஆராய்ச்சிக் கட்டுரையும் பிரசுரிக்கப்பட்டுள்ளது.



இங்களிரு முறை ஏடு. ·
பக்கங்கள் பதினாறு. க
மலரில், சிவாஜியின் பிறந்
சிறுக்கு ஸ்மிதாவின் சிற
மும், ஒன்றிரண்டு கிசுகிசுக்
யிருந்தன. ஆங்காங்கே
''சென்னை . வந்திருந்த
ராஜாடன் படம் எடுத்
படம் எடுத்த போட்டோ
கொடுத்து அந்தப் புகைப்
சொல்லியிருந்தேன். ஆ
வில்லே'' என்று ஒரு வாச
''போட்டோ இப்போ
வி.. து'' என சம்பந்த
காரரின் பதில்!

## இஸ்கஸ்

இந்திய சோவியத் கலாசார கழக மாத இதழ். ஆண்டுச் சந்தா பத்து ரூபாய். ஆயுள் சந்தா நூறு. முதல் பக்கத்தில் கொட்டை எழுத்துக்களில் விளம்பரங்களின் கட்டணம் குறித்த அறிவிப்பு. அதோடு விளம்பரங்கள் சேகரித்து அனுப்புவோருக்குப் பதினைந்து சத விகிதம் கமிஷன் அளிக்கப்படும் என்ற பகிரங்க அறிவிப்பு. பாரதி சிறப்பிதழில் பாரதியைப் பற்றிய குறிப்புகளோடு, சோவியத் யூனியன் பற்றிய சுந்தரவடிவேலுவின் கட்டுரையும் ரஷ்ய மொழியைத் தமிழ்மொழி மூலம் கற்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ள தகவலும் வெளியாகியுள்ளது.

## ஆரோக்கி

அறுபது காசு விலையில்
வெளிவருகின்றது. சில ப
குறிப்பு. வள்ளிக் கிழங்கு
வற்றின் மருத்துவ கு
கட்டுரை ஆகியவை
மருத்துவம் சம்பந்தப்ப
இதழில் மருந்துக்குக்
கிடையாது!

# …த்ததுண்டா...?



…ம்பது காசு. …பிறந்த நாள் …ள் செய்தியும் …பான கடித… பிரசுரமாகி… கவிதைகள். …பாக்கிய… கொண்டேன். …பரிடம் ரூ 10 …தை அனுப்பச் …அவர் அனுப்ப …புகார் கடிதம். …அனுப்பப்பட்டு …ட புகைப்படக்

## நிறைமதி

மாத இதழ். தனிப் பிரதி விலை ரூபா ஒன்று. 48 பக்கங்கள். சிறந்த விகடத் துணுக்குகள். ''விடுதலைக்குப் பின் தமிழ்க் கவிதை'' போன்ற ஒன்றிரண்டு ஆராய்ச்சிக் கட்டுரைகள். தமிழ் இலக்கியம் சம்பந்தப் பட்ட கேள்வி பதில். சிறுகதைகளோடு சமையல் குறிப்புகளும் இடம் பெற்றுள்ளன.

மதுரையிலிருந்து வெளியாகும் மாத இதழ். ஆண்டுச் சந்தா ரூபாய் பதினைந்து. முதல் பக்கம் முழுவதும் ''திருவாக்கு பத்து'' என்ற தலைப்பில் பொன்மொழிகள். அதில் ஒரு வாக்கு: ''நமது உடம்பு கார் போன்றது. புலன்கள் பெட்ரோல் போன்றது. உயிர் ஓட்டுகின்ற சாரதி போன்றது.'' இதன் மூன்றுக்கும் உள்ள தொடர்பை… வாசகர்களே புரிந்துக் கொள்ள வேண்டும். …ல் …றுக்…கள். …துவ் விக் கேள்வி பதில். இவைகளோடு …த்ர …வர்த்த ஒன்று. கேள்விப் பதில். அதில் நம்மைக்

''தெய்வத்துக்கு முன்னால் தேங்காய் உடைக்கிறோமே ஏன்?''

''தேங்காய்க்கு மேலே உள்ள பச்சை மட்டை மாயா மலம். உரித்து எடுக்கிற நார்கள், கன்ம மலம். தெய்வத்திற்கு முன் னால் உடைத்து எடுக்கின்ற ஓடு ஆணவமலம். மும்மலத்தை நீக்கி சுத்த சத்துவ சித்தத்தை அருள வேண்டும் என்ற குறிப்பு தெரிவிக்கவே தேங்காய் உடைக்கிறோம்.''

## குலமகள்

…சேவி…கத்து …கள் பற்றிய …ளங்கி ஆகிய …ன் பற்றிய …றி இருந்தன. …இந்த மாத …ஒரு படம்

## வல்லமை

…முழுவதும் சீர்திருத்தத் தமிழில் அமைந்த …ரிகை. மாதமிருமுறை வெளியாகிறது. …பிரதி ஒரு ரூபாய். பாரதிதாசனைப் …ட்டும் கவிதையோடு. The art of living ஆங்கிலக் கவிதையும் இடம் பெற்…து. சிறுகதைகளோடு, சில விழாக்கள் விவரங்களும். கேள்வி பதில் பகுதியும் …ருக்கின்றன.

-ஏ. வி. எம். கனேஷ்

# கோரிக்கை

## பட்டுக்கோட்டை பிரபாகர்

**25-1-1979** அன்று இந்தியன் ஏர் லைன்ஸ் விலைக்கு வாங்கிய போயிங் 737 ஒன்று இன்று இப்போது, மீனம்பாக்கத்தில் தன் ஓடு தளஎல்லைக்குச் சில மீட்டர்கள் முன்பே டேக் ஆஃப் ஆகி பம்பாயை நோக்கிப் பறக்கத் தொடங்கியது.

திருமதி கலக்ஷணா தத் தன் கொண்டைப் பின்னை இறுக்கிக் கொண்டு 'வுமன்ஸ் எரா' வில் கட்டுரை படிக்கத் துவங்கினாள்.

திரு வள்ளியப்ப செட்டியார் வெற்றிலைக்கு நடுவில் அருகே ஏகம்மையிடம் குனிந்து சூட் கேஸ் பத்திரமாக இருக்கிறதா என்று விசாரித்துக் கொண்டார்.

அப்துல் முத்தலிப் ''இந்த முறையாவது நம்மை ஏமாற்றாமல் அந்த ஏஜண்ட் துபாய்க்கு அனுப்பி வைப்பானா?'' என்று சர்புதீனிடம் கேட்டான்.

ஹென்றி யாரையும் தொல்லைப்படுத்தாமல் 'நடக்கும் மனிதனில்' மேற்குத் திசை இசை கேட்டுக் கொண்டு கருக்கமாய்ச் சிகரெட் பிடித்தான்.

கான்ஃபரன்ஸில் யாது பேசலாம் என்று கண்ணை மூடி மனத்தில் வாக்கியம் எழுதினார் சோப்ரா.

ஏழாம் நம்பர் இருக்கையில் ஒரு சின்னக் குறிப்புப் புத்தகத்தில் சரசரவென்று எந்த மொழியிலோ, எதுவோ எழுதிக் கொண்டிருந்தான் சபாநாயகம்.

கதையின் கடைசி வாக்கியம் வரை சபாநாயகம் வருவதால், அவன் மட்டும் கீழ்க்கண்டவாறு வர்ணிக்கப்படுகிறான்.

நிறம் கருப்பு, விழிகள் கருப்பு, தலைமுடி கருப்பு. முகம் அத்தனை லட்சணமாய் இல்லை. ஒரு டெக்கேட் முன்னர் தைத்த பாண்ட் அணிந்திருந்தான். 'ஒலிம்பிக்ஸ்-80' பனியனை இன்னும் கிழிக்காமல் பாதுகாத்து அணிந்திருந்தான். இங்க் பேனாவால் அல்ல;



பால் முனை பேனாவால் அல்ல; பென்சிலால் எழுதிக் கொண்டிருந்தான்.

பணிப்பெண் சாக்லேட் கொண்டு வந்து தந்தபோது வேண்டாம் என்றான். பழச்சாறு கொண்டு வந்தபோது வேண்டாம் என்றான்.

முட்டைக் கண்ணாடி வழியாகக் கொஞ்ச நேரம் பார்த்துவிட்டு மறுபடி எழுதத் தொடங்கினான்.

அவனை மற்றொரு முறை பணிப் பெண் கடந்தபோது அழைத்தான்.

''யெஸ் ஸார்.''

''உங்கள் பெயர் என்ன?''

''ரீட்டா சௌத்ரி.''

''திருமணம் ஆகிவிட்டதா?''

''இன்னும் இல்லை. ஏன்?''

''நன்றி. சும்மாதான் கேட்டேன்.''

மறுபடி எழுதத் தொடங்கினான். காக்பிட்டின் கதவைப் பார்த்து, பின் எழுதி, பின் பார்த்து, பின் எழுதினான்.

குமாரி ரீட்டா சௌத்ரி மற்றொரு முறை அவனைக் கடந்தபோது அவளின் கை இவனின் முழங்கையில் பட்டு, பென்சில் நழுவிக் கீழே விழுந்தது.

''ஸாரி'' என்று எடுத்துத் தந்தான்.





முனை உடைந்திருந்தது.

''மேடம், பென்சில் சீவ வேண்டும். எனக்கு ப்ளேடு வேண்டும்!''

''ஒரு நிமிடம்'' என்றாள். சென்றாள். வந்தாள். பேப்பர் பிரிக்காத ஒரு பிளேடைத் தந்தாள்.

''நன்றி. அந்த இன்னொரு ஹோஸ்டஸ் பெயர் என்ன?''

''அனிதா அகர்வால்.''

''அவர்களுக்குத் திருமணம் ஆகிவிட்டதா?''

''ஆகிவிட்டது. உங்களுக்கு வாய்ப்பில்லை ஸார்.''

இந்த இரண்டு கேள்வி இரண்டு பதில் பேசப்படுகிற நேரத்தில் வெகு இயல்பாகப் பேப்பரைப் பிரித்திருந்தான் சபாநாயகம்.

''அப்புறம் மேடம்'' என்று எழுந்தான்.

''டாய்லட்டா? அந்தப் பக்கம்.''

''அதில்லை. உங்கள் ரத்தம் என்ன குரூப்?''

ரீட்டா சௌத்ரி அவனின் அடுத்தசெயலை எதிர்பார்க்கவே யில்லை.

''விடு விடு லீவ் மீ... ஆ! நோ!... அம்மா'' என்று அலறினாள். திணறினாள்.

பிரயாணிகள் திரும்பினார்கள்.

ரீட்டாவின் ஒரு கையை முற்றிலும் அவளின் முதுகுப்புறமாக முறுக்கி வைத்திருந்தான். அவனது மற்றொரு கை அவளின் சிவந்த கழுத்திலிருந்தது. காக்பிட் கதவுக்கருகாக அவளைத்தள்ளிக் கொண்டு நிறுத்திப் பேசினான்.

''அசையாதே ரீட்டா. நீ அசைந்தால் என் கை அசையும். கை அசைந்தால் இந்தத் தகரச் சாதனம் அசையும். உன் கழுத்துக்கு உள் பக்கத்தில் உணவுக் குழல், மூச்சுக் குழல் எல்லாம் இருக்கின்றன. அன்புப் பிரயாணிகளே, உங்களில் யார் என்னை நோக்கி ஒரு அடி எடுத்து வைத்தாலும் இந்த பிளேடு இங்கே ஒரு இன்ச் இறங்கும். ரத்தம் ஃபௌண்டன் போல் பீச்சியடிப்பதைப் பார்க்க ஆசைஇருந்தால்அருகே வாருங்கள்.''

''என் கடவுளே! என்ன செய்யப் போகிறாய் அவனை?'' என்றாள் இன்னொரு ஹோஸ்டஸ் தூரத்திலிருந்து.

"என் செயல்களில் யாருடைய குறுக்கீடும் இல்லாத பட்சத்தில்... ஒன்றும் செய்யப் போவதில்லை." என்ற சபாநாயகம் தன் சட்டைப் பையிலிருந்து நொடியில் கர்ச்சீப் எடுத்து அதை ரீட்டாவின் மூக்கில் அழுத்த.. வினாடிகளில் அவள் தொய்ந்து துவண்டு அவன் மீது சாய்ந்தாள்.

"ஓ! யு இண்டெண்ட் டு ஹைஜாக் திஸ் பிளேன்? ஹைஜாக் செய்வது சுலபமான காரியம் இல்லை. நீ தனி நபர். நசுக்கி விடுவார்கள். வேண்டாம். நான் சொல்வதைக் கேள்."

"ஷட் அப்! எனக்குத் தெரியும். பைலட் தானாக இண்டர்காமில் உங்கள் இருவரில்




ஒருவரை அழைக்கும்வரை...காக்பிட் கதவின் உள் தாழ்ப்பாள் இயல்பாகத் திறக்கிற வரை நான் பொறுமையாகக் காத்திருக்கிறேன். அதுவரை யாரும் அவரவர்கள் இடத்தை விட்டு இப்படி அப்படி அசையக் கூடாது. நான் எது செய்தாலும் எதிர்க்கிற நிலையில் இல்லை இந்தப் பெண். இப்போது இவளைக் கொல்வது சுலபம். ஆனால் கொல்ல மாட்டேன். தேவை ஏற்பட்டால் கொல்லவும் தயங்க மாட்டேன்."

"சரி. நகரவில்லை. என்ன உன் இட்டம்? என்ன செய்யப் போகிறாய்?"

"விமானம் பம்பாய் போகவில்லை. மறுபடி சென்னை போகிறது."

பிரயாணிகள் கோரஸாக எதிர்ப்புக் குரல் எழுப்பினர். அவரவர் பிரச்னைகளைச் சொல்லிக் கெஞ்சினார்கள். சபாநாயகம் அமைதியாக இருந்தான்.

சில நிமிடங்கள் கழித்து இண்டர்காமில் அனிதா அகர்வால் அழைக்கப்பட்டாள்.

"நான் போகலாமா?" என்றாள் அனிதா.

"நகராதே" என்றான். கதவின் தாழ்ப்பாள் விலகியதும் ரீட்டாவை இழுத்துக் கொண்டு வேகமாய் நுழைந்து. நுழைந்த உடனே கதவைத் தாழ்ப்பாள் போட்டான் சபாநாயகம்.

"ஹே! வாட் ஈஸ் திஸ்?" என்று திகைத்தான் இஞ்ஜினியர்.

பைலட்டும், கோ-பைலட்டும் அதிர்ச்சியுடன் திரும்பினார்கள்.

ரீட்டாவின் கழுத்தில் பிளேடுடன் சபாநாயகம். கண்களை மூடிய மயக்க நிலையில் ரீட்டா.

"நீங்கள் உங்கள் இருக்கைக்குப்போங்கள். யாரும் என்னை நெருங்கக் கூடாது. இடத்தை விட்டு எழக் கூடாது. மீறினால் உங்கள் சகா உங்களுக்குத்துண்டு துண்டாகத்தான் கிடைப்பாள்."

ஆனாலும் கோ பைலட் கிரண். மின்னல் வேகத்தில் ஹெட்போனைக் கழற்றி. துள்ளி எழுந்து அவனை நோக்கி வர...

ரீட்டாவின் மீது ரத்தக் கோடு பதிய வைத்து பிளேடைக் காட்டி பயமுறுத்தினான்!

"எதற்காகச் சம்பந்தமில்லாமல் அந்தப் பெண்ணைச் சித்திரவதை செய்கிறாய்? என்ன உன் கோரிக்கை? எதற்காக இந்தக் கலாட்டா?" என்றார் பைலட்.

"இதோ பாருங்கள் கேப்டன்! இப்போது உடனடியாக இந்த விமானம் சென்னைக்குத் திரும்ப வேண்டும்."

"என்ன சென்னைக்கா? அங்கிருந்துதானே புறப்பட்டோம்?"

"இதோ பாருங்கள். இது நான் இவளின் அழகான உடலில் செய்கிற இரண்டாவது அடையாளம்" என்று அவள் கழுத்தருகே மெல்லிதாய்க் கிற.. குபுக்கென எழுந்து வழிந்தது ரத்தம்.

"ஹாரிபிள்! வேண்டாம்... வேண்டாம். அவளை எதுவும் செய்யாதே. சென்னைக்குத் திருப்புகிறோம் விமானத்தை. ஆனால் உன் இட்டம் என்ன?"

"அது மீனம்பாக்கத்தில் விமானம் இறங்கினதும் சொல்வேன்."

இருபது நிமிடத்தில் விமானம் சென்னையை நெருங்க, காப்டன் பயணிகளிடம் பேசி நிலையைச் சொன்னார்.

சபாநாயகம் தன் நிலையிலிருந்து மாறவே இல்லை. எந்த வினாடியும் தயாராய் அவள் கழுத்தில் பிளேட் பட்டுக் கொண்டே இருந்தது.

"காப்டன், கண்ட்ரோல் டவருடன் தொடர்பு கொள்ளப் போகிறீர்களா?"

"ஆமாம்."

"நிலையை விளக்கமாக எடுத்துச் சொல்லுங்கள். கடைசியாய் என் சார்பில் ஒரு செய்தி சொல்லுங்கள். நமது முதல் மந்திரியை உடனடியாக விமான நிலையத்திற்கு வரச் சொல்லுங்கள்."

''வாட்? ஆர் யு ஜோக்கிங்?''

''சீரியஸ்... சீரியஸ்... விளையாட்டில்லே. முதல்வர் விமான நிலையத்துக்கு வந்தாக வேண்டும். அவருடன் நான் பேச வேண்டி யிருக்கிறது. ஓர் உயிர் என்பது பெரிய விஷய மில்லையா?''

காப்டன் கண்ட்ரோல் டவருடன் பேசி னார். நிலையைச் சொன்னார். அவனின் செய்தியையும் சொன்னார்.

''மிஸ்டர், விமான நிலையத்தலைமை அதி காரி உன்னுடன் பேச விரும்புகிறார்.''

''நான் விரும்பவில்லை.''

மறுபடி கேப்டன் மைக்கில் பேசினார்.

''அவன் திட்டம் என்ன என்பதே புரிய வில்லை. ஆனால் தீவிரமானவன். நமது ஹோஸ்டஸ் மேல் சின்னச் சின்னக் காயங்கள் ஏற்படுத்தி விட்டான். நிச்சயமாய்க் கொலை யைச் செய்யத் தயங்காதவன். அவன் வார்த்தைப்படி நாங்கள் செயல்படுவதைத் தவிர வேறு வழி தெரியவில்லை. முதல்வர் வரவேண்டும் என்பதில் உறுதியாக இருக் கிறான்.''

விமானத்தை இறக்கும் பணிகளில் ஈடு பட்டனர்.

விமானம் பத்து நிமிடங்களில் ரன்வேயைத் தொட்டது. ஓடியது. ஊர்ந்தது. நின்றது.

''உங்கள் கோரிக்கை எதுவாய் இருந் தாலும் விசேஷ அதிகாரம் வாங்கி இவர்களே நிறைவேற்றி வைக்கத் தயாராய் இருக் கிறார்கள். கோரிக்கை என்ன? பணமா? எவ்வளவு? யாரிடம் தரப்பட வேண்டும்? இல்லை யாராவது விடுதலை செய்யப்பட வேண்டுமா? ஒரு அவுட் லைனாவது தெரிந்தால் தானே நடவடிக்கை எடுக்க முடியும்?''

''முதல்வரிடம்தான் சொல்வேன். சரி யாய் முப்பது நிமிடம் டைம் தருகிறேன்.

முப்பத்தி ஒன்றாவது நிமிடம் காய்கறி மாதிரி இவளை பீஸ் பீஸாக்கி விடுவேன். இதோ பாருங்கள் மூன்றாவது காயம்'' என்று அவள் தாடையில் வெட்டினான். சொட் சொட் எனச் சொட்டியது.

''தயவு செய்து வேண்டாம். சும்மாய் இரு. ஹலோ... ஹி ஈஸ் அடமென்ட். முப்பது நிமிடங்கள் நேரம் கொடுத்திருக் கிறான். அவளைச் சுலபமாய், தயக்கமே இல்லாமல் மேன்மேலும் வெட்டிக்கொண்டே இருக்கிறான். முதலுதவி செய்ய வேண்டிய நிலையில் அவள் இருக்கிறாள். டு சம் திங்'' என்றார் பைலட் மைக்கில்.

ஐந்து நிமிடம் கழித்து....

''தமிழ்நாடு கமிஷனர் ஆஃப் போலீஸ் பேசுகிறார். உங்களைப் பேசச் சொல்கிறார்.''

''மாட்டேன். இன்னும் இருபத்தைந்து நிமிடங்கள் இருக்கின்றன இவளை நான் கொல்வதற்கு என்று சொல்லுங்கள்.''

''முதல்வர் ஊரில் இல்லை.''

''அவரின் என்கேஜ்மெண்ட் எனக்குத் தெரியும். நுங்கம்பாக்கத்தில் ஒரு மாநாடு துவக்க விழாவில் இருக்கிறார். என்னிடம் பேசப் பேச நிமிடங்கள் கரைகின்றன காப்டன்.''

இருபத்தி ஒரு நிமிடங்களுக்குப் பின்...

''நடிகை பிருகஸ்ரீ குழந்தை உன் னைப் படைத்தவன்னு சொன்னதை நம்ப மறுத்தீர்களே...''

''ஆமாம் அதுக்கென்ன?''

''என்னுடைய அடுத்த படத்திலே நிர்வாணமா நடிக்க ஒப்புக்கொண்டு விட்டாளே!....''

—ஸ்ரீ. சுந்தரராஜன்



''முதல்வர் வந்து விட்டார். பேசுகிறார் மிஸ்டர், பேசுங்கள்.''

எதிரே தூரத்தில் விமான நிலைய மாடியில் கும்பலாய்க் கூட்டம் தெரிந்தது.

''நான் முதல்வர் பேசுகிறேன். நான் பேசுவது கேட்கிறதா? ஹலோ!''

''கேட்கிறது. நிலைய மாடியில் அந்தக் கண்ணாடி அறையிலிருந்து இந்த விமா னத்தை, எங்களைப்பார்க்க முடிகிறதா முதல் வர் அவர்களே?''

''முடிகிறது. பைனாகுலர் வழியாகப் பார்க்கிறேன். முதலில் அவளை விட்டுவிடு. உன் குறை என்ன? உன் பிரச்னையை நான் தீர்த்து வைக்கிறேன்.''

''என் பெயர் சபாநாயகம். நான் போடு கிற இரண்டு கோரிக்கைகளுக்கு நீங்கள் சம்மதித்தால் நான் இவளை விட்டு விடு கிறேன். இல்லையென்றால் கொல்வதைத் தவிர வேறு வழியில்லை.''

''தேவையில்லை. என்ன உன் கோரிக் கைகள்?''

''முதல் கோரிக்கை. இவளை நான் விடு வித்த பின் போலீஸ் என்னைக் கைது செய்யக் கூடாது. வழக்குத் தொடரக் கூடாது. கடத் திய, மிரட்டின இந்தக் குற்றங்களை எல்லாம் மன்னிக்க வேண்டும்.''

''விசித்திரமான கோரிக்கை. இரண்டா வது கோரிக்கை என்ன?''

''முதல் கோரிக்கைக்குச்சம்மதமா? அதைச் சொல்லுங்கள்.''

சற்று அமைதிக்குப் பிறகு....

''சரி, உன் மேல்நடவடிக்கை எடுக்கவில்லை. அடுத்த கோரிக்கை என்ன?''

''நான் ஒரு பி. ஏ. பட்டதாரி. ஆறு வருடமாக வேலை இல்லை. என் தகுதிக்கேற்ற சம்பளத்துடன் ஒரு வேலை வேண்டும்.''

# ஒரு சங்கமத்தைத் தேடி..

## வாஸந்தி



### 2

"ஹாய் கார்த்திக்!"

கார்த்திக் திரும்பிப் பார்த்தான். அவனுடன் படிக்கும் அலுவாலியா நின்றிருந்தான். ஸீட்டின் விளிம்பைப் பிடித்தபடி.

"ஓ ஹாய்!"

கார்த்திக் நகர்ந்து அவன் உட்கார இடம் கொடுத்தான். 'ஓல்ட் ஸ்பைஸ் கொலோ'வின் வாசனை. இடுப்பில் 'லீவைஸ்' ஜீன்ஸ் அமர்ந்திருந்தது. அதற்கு மேல் இருந்த ஜாக்கெட்டும் அயல் நாடு. கை நகங்கள் அழகாக வெட்டப்பட்டுச் சிவந்த கனுக்கள் பளபளத்தன. தாடியைச் சர்வ ஜாக்கிரதையாய் எண்ணெய் தடவி, சுருட்டி மடித்துக் கண்ணுக்குத் தெரியாத கறுப்பு வலையால் கட்டியிருந்தான். இந்த அலுவாலியாவைப் பார்க்கும்போதெல்லாம் இவன் தினசரி தன் அலங்காரத்துக்கு எத்தனை மணி நேரம் செலவழிப்பான் என்கிற ஆச்சரியக் கேள்வி எழும். முருகனுக்குச் சந்தனக் காப்பு சாத்த அப்பா எடுத்துக் கொள்ளும் நாழிகையை விட அதிகமாக இருக்க வேண்டும் என்று தோன்றும்.

"என்ன 'யார்' யோசனை?"

கார்த்திக் மழுப்பலாகச் சிரித்தான்.

"ஒன்றுமில்லை. தினமும் ஷேவ் செய்து கொள்வது எனக்கு ரொம்ப பெரிய'போர்'. எத்தனை டைம் வேஸ்ட் என்றும் தோன்றும். தாடி வைத்துக்கொள்ளலாமா என்று நினைப்பேன். நீயானால் ஷேவ் பண்ணிக்கொள்ளும் நேரத்தை விட உன் தாடியைச் சுருட்டிக் கட்டுவதில் அதிக நேரம் எடுத்துக்கொள்வாய் போலிருக்கிறது!"

"என்ன செய்வது 'யார்'? இப்படிக் கட்டவில்லையானால் அது ஒரு பெரிய நியூஸென்ஸ்!"

எத்தனை நாகரிகமானாலும் இவர்கள் முடியை வெட்டாமல் இருப்பது ரொம்பவும் ஆச்சரியம் என்று அவன் நினைத்துக்கொண்டான்.

"என்னுடைய தாத்தாவும் அப்பாவும் இந்த முடி விஷயத்தில் ரொம்ப ஸ்ட்ரிக்ட். கத்தரித்தால் வீட்டை விட்டுப் போய்விடு என்பார்கள். எனக்கு முன்பெல்லாம் அவர்கள் மேல் ரொம்பக் கோபம் வரும். இப்பொழுது சமாதானமாகிவிட்டேன். ஏன் தெரியுமா?"

"ஏன்?"

அலுவாலியா குரலைத் தாழ்த்திப் புன்சிரிப்புடன் சொன்னான்:

"இட் ஹாஸ் எ க்ரேட் ஸெக்ஸ் அப்பீல்!"

கார்த்திக்குக்குப் பெரிதாகச் சிரிக்கவேண்டும் போலத் தோன்றியது. இந்த எண்ணெய்



பிசுக்கு நெடியும், தலைப்பாகையும் ஆளை விரட்டாதோ என்று தோன்றிற்று.

''இருக்கலாம்! நீ அனுபவத்தில் பேசுகிறாய்!''

அலுவாலியா தோழமையுடன் அவனுடைய தொடையைத் தட்டினான்.

''உன் அனுபவம் எப்படி?''

கார்த்திக் உதட்டைப் பிதுக்கினான்.

''யாரும் கிட்ட நெருங்குவதில்லை! நானும் தாடியை வளர்க்க ஆரம்பிக்கலாமா என்று பார்க்கிறேன்!''

அலுவாலியா சிரித்தான்.

''ட்ரை பண்ணிப் பார்! ஆனால் சான்ஸ் இல்லை உனக்கு. ரொம்பப் புத்திசாலிகள் பக்கத்தில் எந்தப் பெண்ணும் வரமாட்டாள். முக்கியமாக உன்னை மாதிரி படிப்பில் சூரப் புலிகளிடம்! என்னைப் பார். நான் எதுக்கும் அலட்டிக் கொள்ள மாட்டேன்!''

'நீ எதுக்கு அலட்டிக்கணும்?' என்று சொல்ல நினைத்துக் கார்த்திக் பேசாமல் இருந்தான். 'நீ சாதாரணமாகப் பான்

செய்தாலும் உன் அப்பாவுக்கு இருக்கும் செல்வாக்கில் உனக்கு நல்ல வேலையைத் தாம் பாளத்தில் வைத்து நீட்டுவார்கள். என் மார்க்கை வைத்துத்தான் என் எதிர்காலம் அமையப் போகிறது. நீ உன் பாரம்பரியத்தின் பெயரைச் சொல்லியே முன்னால் நகர்ந்து விடுவாய். நான் என்னுடையதைச் சொன்னால் கிடைக்கக் கூடிய வாய்ப்பும் போனாலும் போய்விடலாம்... எனக்கிருக்கும் பாதிப்புகள் உனக்கு இருக்குமா? இரண்டு முரண்பாடான உலகங்களுக்கிடையே மாட்டிக் கொண்ட அனுபவம் உனக்கு இருக்குமா?' முரண்பாடுகளே உனக்குச் சாதகமாகிப்போய் விட்ட நிலையில் நீ ஏன் அலட்டிக்கணும்?'

தினமும் அவன் இருக்கும் ராமகிருஷ்ண புரத்திலிருந்து பழைய டில்லியில் இருக்கும் இன்ஜினியரிங் காலேஜுக்குப் போய்ச் சேருவதற்குள் ஊரை விட்டு வேறு ஊர் போகிற மாதிரி இருக்கும். அதுவே பெரிய அனுபவமாக இருக்கும். எத்தனை தினுசுப் பயணிகள் பலவகைக் கனவுகளைச் சுமக்கும் பயணிகள்... எத்தனை பேர்களுடைய கனவுகள் பலிக்கப் போகின்றன! பலித்து வாழ்க்கை சரளமாகப் போகிறது?

காலேஜ் வந்துவிட்டது. பஸ் நிற்பதற்குள் தனது சுபாவமான அவசரத்துடன் இறங்கினான். அவன் ஐ.ஐ.டியில் சேர்ந்திருக்கமுடியும். சுலபமாக இடம் கிடைத்திருக்கும். கிடைத்திருந்தால் ஹாஸ்டலில் இருக்க வேண்டும். அந்தச் செலவை வீட்டின் பொருளாதார நிலை தாங்காது என்கிற உணர்வில் அந்தப் பரீட்சைக்கே அவன் உட்காராததன் காரணம் அவன் ஒருவனுக்கே தெரியும். வீட்டில் யாருக்குமே இந்தப் படிப்பைப் பற்றியோ அது ஏற்படுத்தும் சாத்தியக் கூறுகளைப் பற்றியோ ஒரு கற்பனை உத்தேசம் கூட இல்லை.

---

''ஒரே நாளில் இரண்டு கல்யாணம் செஞ்சுண்டதாச் சொல்றியே உன்னிடம் அப்படி ஏமாந்தவங்க யார் யார்?''

''ஒருத்தியைத்தான் காலையில் பதிவுத் திருமணமும் மாலையில் சீர்திருத்தத் திருமணமும் செஞ்சிண்டேன்.''

—கே.ஆர்.எம்.



''என்ன சுப்புஸ்வாமி, ப்ளஸ் டூ பரீட்சையிலே பிரமாதமாக மார்க் வாங்கியிருக்கானுமே உம்ம பையன்?''

அப்பா அதற்கு என்ன பதில் சொல்கிறார் என்று குறுகுறுப்புடன் ஏக்கமும் எதிர்பார்ப்புமாக அன்று தான் நின்றது இப்பவும் பசுமையாக நினைவிருந்தது.

அப்பா வெற்றிலைச் சிவப்பேறிய புன்னகை பூத்தார்.

''அப்படீன்னு சொன்னான். நான் மார்க் ஷீட்டைப் பார்க்கல்லே. பார்த்துத்தான் எனக்கென்ன புரியும் ஸ்வாமி?''

''மேற்கொண்டு என்ன செய்யப் போறீங்க?''

அப்பா அலட்சியமாக வெற்றிலைக்குச் சுண்ணாம்பு தடவினார்.

''என்ன செய்ய முடியும்? ஏதோ ஆசைக்குக் கொஞ்சம் படிக்க வச்சாச்சு. அதுக்கு மேலே ஆசைப்பட என்னால முடியுமோ? சுருக்கெழுத்து, தட்டெழுத்து ஏதாவது படிச்சு உத்தியோகத்துக்குப் போறான். இல்லேன்னா கோவில் வேலை இருக்கவே இருக்கு!''

இதைக் கேட்டு அன்றைக்கு எப்படிப்பட்ட ஜ்வாலை அடிவயிற்றிலிருந்து பற்றிக் கொண்டது! மனத்தில் பொங்கிய ஆத்திரமும் கோபமும் கண்களிலிருந்து நீராய் இறங்கின.

அவனுடைய ஏமாற்றத்தையும் துயரத்தையும் புரிந்துகொள்ள முடியாத ஒரு அசமஞ்சத் தடித்தனத்தில் அப்பா இருந்தார். அவருக்குத் தெரியாமல் அத்தையின் உதவியோடு அவன் போட்ட இன்ஜினியரிங் கல்லூரி மனுக்களுக்கு நேர்முகத்தேர்வுக்காகப் பதில் வந்தது தெரிந்ததும் அப்பா பெரிய சத்தம் போட்டார்.

''இந்தப் படிப்புக்கெல்லாம் எத்தனை செலவாகும் தெரியுமோல்லியோ? நம்மாலே சாத்தியமா இல்லையான்னு யோசிக்க வேண்டாம்? அத்தனை என்ன சுயநலம் உனக்கு? நீ இன்ஜினீயராகப் போகணும்கிற அவசியம் என்ன? நம்ம பரம்பரையிலே யாரும் செய்யாததை நீ ஏன் செய்யணும்?''

குரலைச் செருமிக்கொண்டு அத்தை சொன்னாள்.

''அண்ணா உன் வழியிலே நடக்கத்தான் கணேசனைத் தயார் பண்ணி யிருக்கியே. நன்னாப் படிக்கிற குழந்தையோட ஆசையைத் தடுப்பானேன்? என்னோட மஞ்சக்காணியிலேந்து வருஷத்துக்கு வர பணத்தை அவன் படிப்பு முடியறவரை எடுத்துக்கோ!''

அப்பா ரௌத்திராகாரமாக மாறினார். ''ஒரு சல்லிக்காசு தொட மாட்டேன். அப்படியாவது அவன் படிச்சுத்தான் ஆகணும்னு ஒண்ணும் கட்டாயமில்லே. இத்தனை நாள் தான் படிப்பு படிப்புன்னு ஒரு காயத்ரி ஜபம் கூட ஒழுங்காச் சொல்லத் தெரியாம உட்கார்ந்தாச்சு. இனிமேல் அதிலெல்லாம் சிரத்தை போகட்டும்!'' கண்ணில் நெருப்பாய்த் தகித்த கண்ணீருடன் அவன் வீட்டிற்கு வெளியே வந்தான். குமுறிக்கொண்டு கிளம்பிய துக்கத்துடன் நடக்க ஆரம்பிக்கையில் அப்பாவின் பெரிய குரல் கேட்டது:

# கோத்ரெஜ் ஸ்டோர்வெல்

## ஒரு விலை கூடிய அலமாரி சிக்கனமானதாக எவ்வாறு அமைகிறது!

நேர்த்தியான அமைப்பும், நீடித்த உழைப்பாற்றலும் பெற்று விளங்கிட, இப்போது கீறல் விழாத மேம்பட்ட மெருகு.

**நீடித்த உழைப்பாற்றல்:** கோத்ரெஜிடம் மட்டுமே உள்ள காற்றற்ற, தானே இயங்கும் மின்சார வண்ணப் பூச்சு முறை காரணமாக, ஸ்டோர்வெல் அனைத்தும் மேன்மையான மெருகுடன் துலங்குகிறது. அப்பழுக்கற்ற தரமான எஃகினால் தயாராவதால், துருப் பிடிக்காது என்ற உறுதியான நம்பிக்கை கிடைக்கிறது. ஸ்டோர்வெல் பல தலைமுறைகளுக்கு நீடித்து உழைக்கிறது.

**அதிகப்படியான பாதுகாப்பு:** கதவிலும் லாக்கரிலும் தகர்க்க முடியாத கோத்ரெஜ் பூட்டு. மறைவான கீல்கள். இறுக மூடிக் கொள்ளும் மும்முனைப் பூட்டுமுறை அமைப்பு. கோத்ரெஜ் மட்டுமே அளிக்கும் நூதன சிறப்பு.



கிடைக்கும் இந்த நன்மைகளால்: நீடித்த உழைப்பாற்றல், அதிகப்படியான பாதுகாப்பு, தேர்ந்தெடுக்க கூடுதல் வாய்ப்பு.

**தேர்ந்தெடுக்க கூடுதல் வாய்ப்பு:** சிதையாத, குறையற்ற ஆளுயரப் பிரதிபிம்பம் தெரிய முழு நீள (137 cm) வெளி நாட்டு 'ப்ளேட்' கண்ணாடி. அட்ஜஸ்ட் செய்யக் கூடிய ஷெல்ப்புகள் டை பார் துணி தொங்கவிடும் ராட், விருப்பத்திற்கேற்றபடி பல வகை இணைப்புகளுடன் கிடைக்கிறது. மூன்று வண்ணங்கள்— ஆலிவ்க்ரீன், ஸ்பெஷல் க்ரே, டிஏ (TA) க்ரே.

**எளிதில் கிடைக்கும் வசதி:** நாடெங்கிலும் உள்ள 400க்கும் அதிகமான விற்பனையாளர்கள் மூலம் பெற்றுக் கொள்ளலாம்.

**கோத்ரெஜ்** மேம்பட்ட தொழில் நுட்பம் மற்றும் மதிப்பு! **Godrej** ®

ULKA-GS-1-82R-TA

''இன்ஜினியராகணும்னு அவன் தலையிலே எழுதியிருந்தா முருகனே அதுக்கு வழி பண்ணுவான்!''

இந்த மாதிரி வக்ர லாஜிக் பேசும் மனிதரை என்ன செய்ய முடியும்?

அவன் யாரும் தென்படாத ஓர் இடத்தில் அமர்ந்து குலுங்கக் குலுங்க அழுதான். மேற் படிப்புப் படிக்கா விட்டால் ஏதாவது அரசாங்க அலுவலகத்தில் கிளார்க்காகவோ இல்லாவிடில் முருகன் சன்னிதியில் அன்னாவுடன் சண்முக கவசம் சொல்லிக்கொண்டோ இருப்போம் என்கிற எண்ணமே பயங்கரமாக இருந்தது.

**''ஹாய்** கார்த்திக்!''

அவன் சட்டென்று சுயநினைவுவந்தவனாய்ச் சுழன்று திரும்பினான். முருகன் கோவில் ட்ரஸ்டிகளில் ஒருவரான சுந்தரேசனின் மகன் தியாகு – அவனைவிட ஒரு வருஷம் ஜூனியர்.

''ஹாய் தியாகு! எங்கே கிளம்பிண்டிருக்கே! கிளாஸ் இல்லையா?''

''யாருக்குமே இல்லே!''

''ஏன்?''

''டில்லி யூனிவர்ஸிடி டீச்சர்ஸ் ஸ்ட்ரைக் நடந்துண்டிருக்கே! இன்னிக்கு யுனிவர்ஸிடி காம்பஸுக்குள்ளே வைஸ் சான்ஸலரை கெராவ் பண்ணப் போறானாம்!''

''தெரியும். ஆனா நம்ம காலேஜ் பட்டுக்காம இருந்ததே!''

''இங்கேயும் காத்துப் பட்டாச்சு. ஸிம்பத்தடிக் ஸ்ட்ரைக்!''

கார்த்திக் லேசான திகைப்புடன் கண்கள் அகல, ''போச்சுடா!'' என்றான். தியாகு நிர்விசாரமாய்ச் சிரித்தான்.

''எனக்கு நல்லது. இன்னிக்கு டெஸ்ட் இருந்தது. தயாரிக்கவே யில்லே நான்!''

மாணவர்கள் எல்லாம் கும்பல் கும்பலாக வெளியே வருவதைக் கார்த்திக் யோசனையுடன் பார்த்தான். தூரத்தில் அலுவாலியாவின் இளநீல நிறத் தலைப்பாகை தெரிந்தது. கார்த்திக்கைப் பார்த்துக் கை யசைத்துச் சிரித்தான்.

''குட் நியூஸ் கார்த்திக். நோ டெஸ்ட்!'' கார்த்திக் அலுப்புடன் திரும்பினான்.

காலையிலிருந்து விழுந்தடித்துக் கொண்டு கிளம்பி அத்தனை தூரம் பயணித்து – எல்லாம் விரயமாகிப் போனது எந்த வகையில் குட் நியூஸ்! சுற்றிலும் நகர்ந்து கொண்டிருந்த கும்பல்களை ஆராய்ந்தபடி அவன் நடந்தான். சிலர் ஸ்டிரைக்கைப் பற்றித் தீவிரமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். சிலர் 'காலேஜ்தான் இல்லையே எந்த சினிமாவுக்குப் போகலாம்' என்ற சர்ச்சையில் இருந்தார்கள்.

''கார்த்திக்!''

அவன் திரும்பினான்.

அலுவாலியாவும், பாண்டேயும், குப்தாவும் நின்றிருந்தார்கள்.

''என்ன?''

''கமான் யார்! காம்பஸுக்குப் போய்ப் பார்த்துவிட்டு வரலாம் அங்கு நடக்கிற தமாஷை!''

''வேண்டாம். எனக்கு அந்த மாதிரி தமாஷெல்லாம் பிடிக்காது.''

''இவனொரு போர்!'' என்றான் குப்தா. ''இவனுக்கு டெஸ்ட் எழுதறதுதான் தமாஷ்!''

''பீ எ ஸ்போர்ட் யார்!''

''நோ,ஸாரி, நான் வீட்டுக்குபோறேன்!'' என்றான்.

''நீ அடிப்படையிலே ஒரு சுயநலவாதி!'' என்றான் பாண்டே. மாணவர் சமூகத்தைச் சேர்ந்த உன்னை அதைப் பாதிக்கிற விஷயமும் பாதிக்க வேண்டாமா? உன்னுடைய உணர்வு களுக்குத்தான் நீ மதிப்புக் கொடுப்பியா? மற்றவர்களின் உணர்ச்சிகள் என்னன்னு தெரிந்து கொள்ள வேண்டாமா?''

இது கிட்டத்தட்ட அப்பா பேசுகிற ஸ்டைலில் இருந்தது. அவன் தோற்றுப் போன பலனைத்துடன்,

''ஓ.கே, ஓ.கே. வரேன்! யூனிவர்ஸிடியின் நாடியைப் பிடிச்சுப் பார்த்துடலாம்!'' என்று புன்னகைத்தான்.

**கா**ம்பஸில் ஏராளமான மாணவர் கும்பலும் இரைச்சலுமாக இருந்தது. உபாத்தியாயர்களின் ஸ்ட்ரைக்கை ஆதரித்து ஒரு கும்பலும், எதிர்த்து ஒரு கும்பலும், ஸ்ட்ரைக் தொடருவதற்குக் காரணமான வைஸ் சான்ஸலரைஎதிர்த்து ஒரு கும்பலும்....

அதில் எத்தனை பெண்கள்!

கார்த்திக் வியப்புடன் பார்த்தான். முக்கால்வாசிப் பெண்கள் ஹை ஹீல் ஷூவும் ஜீன்ஸும் பிடிப்பான ஸ்வெட்டரும் அணிந்திருந்தார்கள். ஆண் பெண் வித்தியாசமில்லாமல் சரளமாக வளைய வந்தார்கள்.

வைஸ் சான்ஸலரின் அலுவலகத்தில் முன் நின்றிருந்த கும்பலுடன் தானும் நிற்பதை அவன் உணர்ந்தான். அவனுடன் வந்திருந்த பையன்கள் வெவ்வேறு திசைக்குப் போய்விட்டிருந்தது தெரிந்தது.

''இந்த வைஸ் சான்ஸலரை இன்று சும்மா விடக் கூடாது!''

அவன் பக்கத்தில் நின்றிருந்த பெண் காரசாரமாகச் சொன்னாள். அவன் திரும்பிப் பார்த்தான். அல்லிப் பூ மாதிரி மிக அழகிய பெண். கன்னங்களில் குளிர் காலச் சிவப் பேறியிருந்தது. அகன்ற விழிகளில் உல்லாசப் பளபளப்புத் தெரிந்தது.

திடீரென்று இரைச்சல் அதிகமாகக் கேட்டது. போலீஸ் தலைகள் தெரிந்தன. அவன் அவசரமாக அவளிடம் சொன்னான்:

''சீக்கிரம் அந்தண்டை போ. போலீஸ் வந்திருக்கிறது!''

அவள் கோபத்துடன் அவனைப் பார்த்தாள்.

''நீ வேண்டுமானால் போ. நான் கோழை இல்லை!''

அடுத்த சில நிமிஷங்களில் ஏற்பட்ட குழப்பத்தில் அவன் ஒன்றும் புரியாமல் திகைத்து நின்று கிளம்ப யத்தனிக்கையில், அந்தப் பெண் அடிபட்டு மயங்கிக் கீழே விழுந்திருந்தாள். (தொடரும்)

# இதை விட நல்ல வரன்

ஹேமா ஆனந்ததீர்த்தன்

டெட்ராய்ட் ஏர்போர்ட்டில் விமானத்திலிருந்து இறங்கி வெளியே வந்த கிருஷ்ணமூர்த்தியையும் ருக்மிணியையும் எதிர்கொள்ள அவர்களுடைய பெண் பாக்கியம், மாப்பிள்ளை சுந்தரம், பேரப் பிள்ளைகள் லைலா, வினோத் ஆகிய நான்கு பேரும் ஆவலோடு காத்திருந்தார்கள். பரஸ்பரம் கண்டுகொண்டதும் ஆறு பேருடைய முகங்களும் மலர்ந்தன.

''வெல்கம் டு த ஸ்டேட்ஸ்'' என்று மாமனாரைக் கைலாகு கொடுத்து வரவேற்றான் சுந்தரம்.

''வர்றேன் வர்றேன்னிட்டுக் கடைசியா வந்துட்டே'' என்று தாயாரை வரவேற்றாள் பாக்கியம்.

''தாத்தா'' என்று லைலா கிருஷ்ணமூர்த்தியிடம் சென்று அவர் இடுப்பைக் கட்டிக்கொண்டாள்.

''பாட்டி'' என்று வினோத் தன் இரண்டு கைகளையும் தூக்கி எடுத்துக் கொள்ளும் படி குதித்தான்.

சுந்தரம், பாக்கியம், குழந்தைகள் எல்லோரும் பத்து வாரங்கள் இந்தியாவில் இருந்துவிட்டுப் பதினைந்து நாட்களுக்கு முன்னால்தான் ஸ்டேட்ஸுக்குத் திரும்பியிருந்ததால் இந்தியாவில் இருந்தபோது தாத்தா, பாட்டியோடு ஒட்டிக் கொண்டு பழகியிருந்ததால் அவர்கள் இருவரையும் குழந்தைகள் மறந்திருக்கவில்லை. எல்லோருமே சேர்ந்தாற்போல் ஸ்டேட்ஸுக்கு வருவதாகத்தான் முதலில் ஏற்பாடு. ஆனால் கிருஷ்ணமூர்த்திக்கும் ருக்மிணிக்கும் விஸா கிடைப்பதில் தாமதம் ஆயிற்று. அவர்களுக்கு விஸா கிடைக்கும் வரையில் சுந்தரம் இந்தியாவில் இருக்க முடியவில்லை. எனவேதான் அந்தப் பதினைந்து நாட்கள் இடைவெளி.

ஒருவரை யொருவர் குசலப்ரச்னம் விசாரித்து முடிப்பதற்குள்ளாகவே கன்வேயர் பெல்டில் அவர்களுடைய சாமான்கள் வந்து விட்டன.

சாமான்களை எடுத்துக் கொண்டு அவர்கள் வெளியே வந்ததும் ஊசி குத்துவது போல் குளிர் சுறுக்கென்று குத்தியது.

''அநியாயமாகக் குளிர்றதே'' என்று கிருஷ்ணமூர்த்தி கைகளை இறுகக் கட்டிக் கொண்டார்.

''ஆமா. ரொம்பக் குளிரும். நாம இங்கே உள்ளேயே இந்தக் கண்ணாடிக் கதவுக்குப் பின்னாலேயே இருக்கலாம். அவர் கார் கொண்டு வரட்டும். கார்ல உக்கார்ந்துட்டா குளிர் தெரியாது'' என்றாள் பாக்கியம்.

லைலா தாத்தாவின் கையைப் பிடித்துக் கொண்டு அவருடன் சுவாரஸ்யமாக ஏதோ பேசத் தொடங்கினாள்.

வினோத் பாட்டியின் இடுப்பில் தொத்திக் கொண்டான். ருக்மிணியும் பாக்கியமும் பதினைந்து நாள் சமாசாரத்தையும் பதினைந்தே நிமிடங்களில் பேசி முடித்துவிட வேண்டிய அவசியம் இருந்தது போலப் பேசத் தொடங்கினார்கள்.

''கார் வந்துடுத்து வா'' என்று தாயாரை அழைத்தாள் பாக்கியம்.



எல்லாரும் போய்க் காரில் ஏறிக்கொண்டார்கள். மாமனாரும் மாப்பிள்ளையும் முன் சீட்டுகளிலும் மற்றவர்கள் பின் சீட்டுகளிலும் உட்கார்ந்து கொண்டனர்.

''லெஃப்ட் ஹேண்ட் ட்ரைவா? ஞாபகமே இருக்க மாட்டேங்கறது. நியூயார்க்ல உங்க ஃப்ரண்டோட கார்லதான் முதமுதல்ல ஏறினேன். வலது பக்கம் ஏறிடக்காரவே வரமாட்டேங்கறது எனக்கு. இடது பக்கமே கால் போறது. இந்தியாவில் டாக்ஸி ஏறி ஏறி அதே பழக்கம்.'' என்று கூறியண்டியே கிருஷ்ணமூர்த்தி மாப்பிள்ளையைப் பார்த்துப் புன்னகைத்தார்.



''நீ சொன்னபடி காருக்குள்ள குளிரே தெரியலையே!'' என்றாள் பாக்கியம்.

''ஹீட்டர் போட்டிருக்கேன். ஏர் கன்டிஷன்ட் கார். வெயில் காலத்தில குளிராப் போட்டுக்கலாம்'' என்றார் மாப்பிள்ளை சுந்தரம்.

''தேவலையே. வீடு மாதிரி. அங்கே வீட்ல கூட எங்களுக்கு ஏர் கண்டிஷன் இல்லே. இங்கே உங்களுக்கு கார்ல கூட ஏர் கண்டிஷன்'' என்று பெருமை தொனிக்க ருக்மிணி சொன்னாள்.

''நியூயார்க்ல உங்க ஃப்ரெண்ட் விகவோட கார் ஏர்கண்டிஷன்ட் இல்லே – போலிருக்கே?'' சந்தேகத்தைக் கிளப்பினார் கிருஷ்ணமூர்த்தி.

''இருக்காது. அது சாதாரணக் கார்தான். செகண்ட் ஹாண்ட். ஐயாயிரம் டாலருக்கு வாங்கினேன். இது பென்ஸ் கார். ஜெர்மன் மேக். இருபத்தையாயிரம் டாலர். இன்னிக்கு எக்ஸ்சேஞ்ஜ் ரேட்ல கிட்டத்தட்ட இரண்டரை லட்சம் ரூபாய் ஆறது. ஆனா இதே கார் இந்தியாவிலே அந்த விலைக்குக் கிடைக்காது. ட்யூடி கீடி எல்லாம் சேர்ந்து, எட்டு, ஒன்பது லட்சம் சொல்லுவான்'' என்று தன் காரின் பிரதாபத்தை விளக்கினான் சுந்தரம்.

''அம்மாடியோவ்! இந்த ஜன்மத்துல தான் இந்த மாதிரி கார்ல உட்காந்துண்டு சவாரி பண்ணுவேன்னு நினைச்சதில்லே. உங்க புண்ணியத்திலே அந்தப் ப்ராப்தம் கிடைச்சது மாப்பிள்ளே'' என்றார் கிருஷ்ணமூர்த்தி.

''அப்பா பேசாம இருங்கோ. நீங்க என்னத்தையாவது சொல்லிட்டேன்னா அவர் இன்னிக்கு முழுக்க அந்தக் காரின் பெருமையைப் பத்தியே பேசிண்டிருப்பார். போரடிச்சுடுவார்'' என்று பாக்கியம் மேலுக்குச் சொன்னாலும் அவள் உள்ளத்தில்

பொங்கிய மகிழ்ச்சி முகத்தில் தெரியத் தான் தெரிந்தது.

''இந்தக் கார் இந்தியாவில எவ்வளவு பேர் கிட்ட இருக்கு தெரியுமோ? நாலஞ்சு பேருக்கு மேல் கிடையாது. அந்த நாலஞ்சு பேரில ஒருத்தர் பிரஸிடெண்ட் ஆஃப் இந்தியா'' என்று சுந்தரம் தொடர்ந்தான்.

''அதிர்ஷ்டக்காரிடி நீ'' என்று தாயார் மகளின் காதில் கிசுகிசுத்தாள்.

கார் எழுபது மைல் வேகத்தில் டொலெடோவை நோக்கி ஓடிக் கொண்டிருந்தது.

''அதோ தெரியறதே அதுதான் நம்ம வீடு'' என்று காட்டினான் பாக்கியம்.

''இங்கே பாத்திங்களா மாமா இண்டியா மாதிரி இங்கே கராஜ் திறக்கறதுக்கு ஹார்ன் அடிச்சு ஆளை வரவழைக்க வேண்டாம். அவன் வந்து கதவைத் திறக்கிறவரைக்கும் காத்துண்டு இருக்கவும் வேண்டாம். ரிமோட் கண்ட்ரோல். இதோ இந்தப் பொத்தானை அழுத்தினால் போதும்'' என்று தலைக்கு மேல் ரியர்வ்யூ கண்ணாடிக்குப் பக்கத்தில் ஒரு பொத்தானை அழுத்தினான்.

கராஜ் கதவு தானே மேலே போவதையும், உள்ளே விளக்கு எரிவதையும் கிருஷ்ணமூர்த்தியும் ருக்மிணியும் ஆச்சரியத்துடன் வாய் பிளந்தபடி பார்த்தார்கள்.

கராஜுக்குள் இன்னொரு கார் நின்றிருந்தது.

''உள்ளே வேற ஏதோ கார் இருக்கே?'' ருக்மிணி கேட்டாள்.

''டயோடா. உங்க பொண்ணோட கார். இப்பத்தான் வாங்கித்து. நாலு நாளாச்சு. நீங்க வர்றேளே உங்களை எல்லா இடத்துக்கும் அழைச்சுண்டு போய்க் காட்டறதுக்குச் சௌகரியமா இருக்கணுமேங்கறத்துக்காக வாங்கினோம். இந்தக் கார் நான் காலைல எடுத்துண்டு போனேன்னா ராத்திரிதான் வருவேன். என்னை நம்பினா நீங்க ஒரு இடத்தையும் பார்க்க முடியாதுன்னு உங்க பொண்ணு இந்தக் கார் வாங்கியிருக்கா'' என்றான் சுந்தரம்.

எல்லாரும் வீட்டுக்குள் நுழைந்தார்கள். மெத்து மெத்தென்று கீழே கார்பெட். நுழைந்தவுடன் டைனிங் ரூம். அதையடுத்தாற் போல் சமையலறை. இந்தப் பக்கம் ஃபாமிலி ரூம். அந்தப் பக்கம் லிவிங் ரூம். ஃபாமிலி ரூமில் நாலு நாலு பேர் சௌகரியமாக உட்காருகிற மாதிரி மூணு பெரிய சோபா, பெரிய பீரோ மாதிரி டி. வி., புத்தக அலமாரிகள், ஃபையர் ப்ளேஸ், ரிகார்ட் ப்ளேயர், காஸெட் டெக் முதலியன. லிவிங் ரூமில் ஃபாமிலி ரூமைப் போலவே நாலு சோபா, டீபாய். லிவிங் ரூமை ஒட்டினாற்போல இன்னொரு பெரிய டைனிங் ரூம். இது ஃபார்மல் டைனிங் ரூமாம். விருந்து கிருந்து வைக்கும்போது இதை உபயோகப்படுத்துவார்களாம்.

''இந்த மேஜையும், நாற்காலிகளும் மட்டும் ஏழாயிரம் டாலர்'' என்றான் சுந்தரம். ஷோ கேஸில் தட்டுகளும், கோப்பைகளும் கண்ணாடிக் கிண்ணங்களும், வெள்ளியில் ஸ்பூன்கள், கத்திகள், ஃபோர்க்குகள் என்று ஏராளமாக வைக்கப் பட்டிருந்தன. அவைகளெல்லாம் எவ்வளவு டாலர்கள் இருக்குமோ என்று கிருஷ்ணமூர்த்தி வியந்து கொண்டார்.

''மாடிக்குப் போய்ப் பார்க்கலாம் வாங்கோ'' என்று அழைத்துக் கொண்டு போனான். மாடிப் படிகளிலும் கார்பெட்.

மாஸ்டர் பெட் ரூம், கெஸ்ட் பெட்ரூம், குழந்தைகள் பெட்ரூம், எக்ஸ்ட்ரா பெட்ரூம் என்று நான்கு படுக்கை யறைகள் இருந்தன.

''மாப்பிளே, வர்றபோது பாம்பேல சென்டார் ஹோட்டல்ல மூணு மணி நேரம் ட்ரான்ஸிட்ல தங்கியிருந்தோம் ஏர் இண்டியா தயவுல. சாதாரணமா அந்த ரூமுக்கு ஒரு நாளைக்கு 485 ரூபாய் வாடகையாம். அந்த ரேட்ல பார்த்தா எங்க கெஸ்ட் பெட்ரூமுக்கு ஒரு நாளுக்கு ரூ. 750 வாடகை கொடுக்கலாம்னு நினைக்கிறேன்'' என்று கிருஷ்ணமூர்த்தி சொன்னதும் சுந்தரத்தின் முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது.

''ஒரு லட்சத்துப் பத்தாயிரம் டாலர் ஆச்சு எல்லாமாச் சேர்ந்து'' என்றான்.

கிருஷ்ணமூர்த்தி கணக்குப் போட்டுப் பார்த்துக் கொண்டார். கிட்டத்தட்டப் பதினொரு லட்சம் ரூபாய்!

---

கோடைக்கானல் அருகே செண்பகனூர் தபால் நிலையத்தில் 68 ஆண்டுகள் தொடர்ந்து பணியாற்றிய பீட்டர் 96வது வயதில் உடல்நலக் குறைவால் தாமாகவே பதவி விலகிக் கொண்டார் என கல்கி 25-7-82 இதழில் எழுதியிருந்தேன். தற்சமயம் அவருக்கு உடம்பு பூரணமாகக் குணமாகி விட்டது. தபால் தந்தி இலாகா இவருடைய சேவைக் காலத்தில் அலுவலகப் பணி மிகவும் திறமையுடன் நடத்தியதை மனதில் கொண்டு செண்பகனூர் தபால் நிலையத்தில் தொடர்ந்து பணியாற்ற 1983ம் ஆண்டு ஜனவரி முதல் தேதியிலிருந்து மீண்டும் அனுமதித்துள்ளது. 96 வயதில் மீண்டும் வேலையில் சேர்ந்து பொறுப்பேற்கிறார் பீட்டர்!

—ராஜேஸ்வரி



சாப்பிட்டுவிட்டு வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். சுந்தரம் ஒளிவு மறைவில்லாமல் தனக்கு வரும் வருமானம், சேமிப்புகள், தன் எதிர்காலத் திட்டங்கள் எல்லாவற்றையும் மாமனுருக்கும் மாமியாருக்கும் விளக்கினுன்.

இரவு எல்லாரும் படுக்கச் சென்றபோது மணி இரண்டு.

ருக்மிணி பிரயாணக் களைப்பினுல் படுத்தவுடன் தூங்கிவிட்டாள். கிருஷ்ணமூர்த்திக்கு அளவுக்கு மீறிய மகிழ்ச்சியினுல் தூக்கம் வரவில்லை. அவர் நினைவுகள் கடந்த காலத்துக்குச் சென்று விட்டன.

பாக்கியத்துக்கு முதன் முதலில் பார்த்த வரன் ஒரு ஐ. ஏ. எஸ். அவள் அழகில் மயங்கி அவளை மணக்க அவன் முன்வந்திருந்தான். ஜாதகங்கள் பொருந்தியிருந்தன. சீர்வரிசைகள் கிருஷ்ணமூர்த்தியின் சக்திக்கு மீறிக் கேட்டு முடியாது என்று அவர் வாயால் சொல்ல வைத்துத் தட்டிக் கழித்து விட்டார்கள். பாக்கியத்திற்கு இது பெருத்த இடி போல அவள் மனத்தைத் தாக்கியது.

ஆறு மாசத்துக்கெல்லாம் இன்னெரு வரன் 'வந்தது. பையன் நல்ல அழகன். பிரிட்டிஷ் பாங்க் ஒன்றில் பெரிய உத்தியோகத்தில் இருந்தான். பையனின் மாமா ஒருவர் அவன் தன் பெண்ணை (அழகில்லை என்பதற்காக) கல்யாணம் செய்து கொள்ள மறுத்து விட்டான் என்ற ஆத்திரத்தில் இல்லாததும் பொல்லாததும் ஏதோ சொல்லிக் கலகம் செய்து அந்த வரனும் குதிராமல் செய்து விட்டார்.

கிருஷ்ணமூர்த்தி மறுபடியும் மகளுக்குத் தேறுதல் சொல்ல வேண்டி வந்தது.

''நான் புண்ணியம் பண்ணியிருக்கேனே இல்லியோ, ஆனு உனக்கிருக்கிற தெய்வ பக்திக்கு உனக்கு நல்ல புருஷன் கண்டிப்பாக் கிடைச்சே ஆகணும்மா.'' என்ருர் கிருஷ்ணமூர்த்தி.

இரண்டாவதாக வந்த வரனும் இல்லை யென்று ஆகிவிட்ட நான்காவது மாதமே சுந்தரம் பாக்கியத்தைப் பெண் பார்க்க வந்தான். பிடித்து விட்டது. மற்ற விஷயங்களும் ஒத்துப்போயின. கல்யாணம் நிச்சயமாகி நடந்தும் முடிந்து விட்டது. அப்பொழுது சுந்தரத்தின் கையில் இருந்தது ஒரு எம். பி. பி. எஸ். டிகிரியும், அமெரிக்காவில் போய் டாக்டர் தொழில் புரிவதற்கான அருகதை அளிக்கக்கூடிய இன்னும் இரண்டொரு பரீட்சை தேறிய சர்ட்டிபிகேட்டுகளும்தான்.

சுந்தரம் பெயருக்குத் தகுந்தாற்போல் சுந்தரனுக இருந்தான். அமெரிக்காவில் வேலை கிடைக்குமா கிடைக்காதா என்பதே நிச்சயமாகத் தெரியாமல் கிளம்பிச் சென்ருன். இரண்டே மாதங்களில் பாக்கியத்தையும் அழைத்துக் கொண்டான். லைலாவும் விநோத்தும் அமெரிக்காவிலேயேபிறந்த குழந்தைகள்தான்.




விழுப்புரத்திலிருக்கும் என் மாமா வீட்டுக்குப் போயிருந்தேன். இரவு 8 மணி இருக்கும். பக்கத்தில் இருக்கும் மாடி வீட்டில் திடீரென்று கரெண்ட் ஃப்யூஸ் போய்விட்டிருக்கிறது. உடனே அந்த மாடி வீட்டுக்காரர் வெளியில் ஓடி வந்து, 'க்ருஷ்ணு' என்று சத்தம் போட்டு விட்டு உள்ளே போனுர். சற்று நேரத்திலெல்லாம் அந்த வீட்டில் 'லைட்' எரிந்ததைப் பார்த்தேன். எனக்கு ஆச்சரியமாய்ப் போய்விட்டது. ஆனுல் அப்புறம்தான் விஷயம் புரிந்தது. அந்த வீட்டின் மாடியில் குடியிருப்பவர் பெயர் கிருஷ்ணன் என்பதும், அவர் ஓர் எலக்ட்ரீஷியன் என்பதும்!

—ரா. ஜோதிராமன்

"பாக்கியம், உனக்கு முதல்ல ரெண்டு வரன் வந்து குதிராமப் போச்சே அப்ப நான் உனக்கு ஒரு ஆறுதல் சொன்னேனே, ஞாபகமிருக்கா?'' என்று கிருஷ்ணமூர்த்தி கேட்டார்.

''ஓ, நன்னு ஞாபகமிருக்கு. இதைவிட பத்து மடங்கு நல்ல வரனு உனக்குக் கிடைக்கும்மா அப்படின்னு சொன்னீங்க.''

''அது பலிச்சுதா இல்லியா? என் மனசுக்கு ரொம்ப திருப்தியா இருக்கும்மா.''

''மாமா, நான் ஒரு பெரிய தப்பு பண்ணிட்டேங்கறது இப்பத்தான் எனக்குத் தெரியறது. நான் பாக்கியத்தைக் கல்யாணம் பண்ணிண்டிருக்கக் கூடாது'' என்ருன் சுந்தரம் திடீரென்று.

''ஏன் மாப்பிள்ளே?'' — கிருஷ்ணமூர்த்தி பதறினுர்.

''நான் அவளை வேண்டானு சொல்லியிருந்தா என்னைவிடப் பத்து மடங்கு நல்ல வரன் அவளுக்குக் கிடைத்திருக்குமோ என்னவோ'' என்று கூறிச் சிரித்தான்.

''இதுதானு? நான் என்னவோன்னு பயந்துட்டேன். மாப்பிள்ளைக்கு நல்ல சென்ஸ் ஆஃப் ஹ்யூமர்'' என்று கிருஷ்ணமூர்த்தி பக்கத்தில் உட்கார்ந்திருந்த சுந்தரத்தைப் பெருமையுடனும் வாஞ்சையுடனும் அணைத்துக் கொண்டார். ருக்மிணியும் பாக்கியமும் குழந்தைகளும் அதைப் பார்த்து மகிழ்ந்தனர்.

# தலைவலி பலவகை உண்டு





# சிகிச்சை ஒன்றே ஒன்று!

# அனாஸின்

## இதில் அதிக அளவில் வலி-நிவாரணி அடங்கியுள்ளது

துரித நிவாரணம் அளிக்க, உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும், வலி-நிவாரணி மருந்து அதிக அளவில் கொண்டது — அனாஸின்.

தலைவலி, ஜலதோஷம், ஃப்ளூ, முதுகு வலி, தசை வலி, பல் வலி ஆகியவற்றிற்கு நல்ல பலனளிக்கிறது.

அனாஸின் மீது மட்டுமே நம்பிக்கை வையுங்கள்.

இப்போது பாதுகாப்பான ஃபாயில் உறையில்.






இந்தியாவின் புகழ்பெற்ற வலி-நிவாரணி மருந்து

* Licensed user of T.M. : Geoffrey Manners & Co. Ltd.

GM-2-83 TM

## அத்தியாயம் 4

"கரீம் பாய் க்ளீனர் செல்லத்தம்பி."

''கரீம் பாயா?'' உள்ளே பரபரப்புக் கூடிற்று.

''இல்லே. கரீம்பாய் க்ளீனரு.''

''சின்னப் பையனு?''

''ஆமாம்.'' கரீம் பாய், செல்லத்தம்பியை சின்னப் பையன் என்றுதான் கூப்பிடுவார். நிறையப்பேர் அவனைத் தண்ணித் தொட்டித் தெருவில் அப்படித்தான் கூப்பிடுவார்கள். மார் முழுக்க ரோமம் வளர்ந்த பின்னும் அவன் நிறையப் பேருக்குச் சின்னப் பையன் தான். சுயமாய் வண்டி பிடிக்கிற வரையில் இப்படித்தான் கூப்பிடுவார்கள். சுயமாய் வண்டி பிடிக்கிற காலம் வந்து விட்டது.

ஆள் அடித்தது நான்தான் என்று ஏற்றுக் கொண்டு உள்ளே போய் ஆறு மாசமோ எட்டு மாசமோ இருந்து விட்டு வந்தால் தனியே ஓட்ட வண்டி கிடைக்கும். கரீம் பாயே இதற்கு ஏற்பாடு செய்தாலும் செய்ய லாம். டிரைவர் செல்லத்தம்பி என்று மாறி விடலாம்.

''என்னு கண்ணு கரீம்பாய் கூப்டுச்சா?''

''இல்ல. நான்தான்'' செல்லத்தம்பி மெல்லிய குரலில் பேசினன்.

# இரும்பு குதிரைகள்

## பாலகுமாரன்



''என்னு காலங்கார்த்தாலே.... அரிசி லோட் எடுத்தாந்தியா?''

''ஆமா.''

''போய்த் தூங்கறதுதானே. தண்ணி போட்டிருக்கியா?'' கௌசல்யா வெளியே வந்து புடவையைப் பல்லால் கடித்து மறைத்தபடி ரவிக்கை அணிந்து கொண்டாள்.

''அதெல்லா மில்லே.''

''ராவிக்கா வாயேன். பேஜாரா இருக்குது.''

''மணி இருக்கானு?''

''ஆரும் இல்லே. ராவிக்கு வா. நான் கொஞ்சம் தூங்கணும்.''

''கூடப் போட்டுத் தரேன்.''

''என்னுடா இது. வழில இருக்கிறதெல்லாம் வுட்டுட்டு என் தாலிய வந்து அறுக்கற. எல்லாத்தையும் முடிச்சுட்டு வர்றதானே?''

''வழில ஆள் அடிச்சிட்டம். பாய் நிக்காத வந்துட்டாரு.''

''எங்கித்து ஆளு. பூட்சா?''

''புத்தூர் பக்கம். பூட்சான்னு தெரிலே.''

''அப்புறம்?''

''பாய் நான்அடிச்சதா சொல்லிடுவாரு.''

''போலீஸ் தேடறுங்களா?''

''தெரிலே.'' செல்லத்தம்பி சோர்ந்தபடி பெட்டியின் ஓரம் சரிந்து உட்கார்ந்துகொண் டான்.

கௌசல்யா அவனை இரக்கத்துடன் பார்த் தாள். இதன் முடிவு அவனுக்குத் தெரியும். தண்ணீர்த் தொட்டித் தெருவின் விதி முறைகள் அவனுக்கும் அத்துப்படி. அந் தத் தெருவுக்கு அவன் பதினேரு வயதில் வந்தான். கடந்த பதினன்கு வருடங்களில் அவ னுக்கு நிறைய டிரைவர்கள், க்ளீனர்களை, ஏஜண்டுகளை,

முதலாளிகளைத் தெரியும். இவன் நிலைமை இப்போது என்ன என்று கௌசல்யாவுக்குத் துல்லியமாய்ப் புரிந்தது.

''சரி...சரி... இதுக்குப் போய் ஏன் அழுவறே.''

''நான் அழுவலே.''

''கொஞ்சம் பிராந்தி இருக்கு. சாப்டிறியா?''

''வாணாம். நான் அதெல்லாம் சாப்புடற தில்லே.''

''நான் ஒரு டீ குடிச்சுட்டு வந்துரட்டா. தொண்டை எரியுது.''

செல்லத்தம்பி நிமிர்ந்து பார்த்தான். எழுந்து மெல்லச் சாக்கடைச் சந்து நோக்கித் திரும்பினான்.

''த்தே... என்ன கோச்சுக்கினு போற. கொஞ்சம் இரு. வந்துட்றேன்.''

''கோபம் என்ன... நீ போய் டீ சாப்டு.''

''உனக்கு?''

''இப்பத்தான் சாப்ட்டேன். மேஸ்திரி வாங்கிக் குடுத்தாரு. நான் போய்த் தூங்குறேன்.''

''இங்கதான் படுத்துக்கயேன்.''

''வாணாம்.''

''த்தே... உக்காரு. போய்க்கினே இருக்கற....''

''வாணாம் வுடு.''

''கூப்டுட்டு வாணாம்னு வுட்ருவாங்களா''

''சரி. இந்தா.'' செல்லத்தம்பி அரை நிக்கரில் கை விட்டு ரூபாய் நோட்டுக்களைப் பிரித்தான்.

''ச்சீ... துட்டா கேட்டேன் உன்கிட்டே. உள்ள வா. தூங்கிட்டுப் போ.''

''வாணாம்.''

''அட வான்றேன். பார வண்டி கட்டறத்துக்குள்ள நாலா பக்கமும் சாமான் வுளும். ரோட்டோரமாப் போறவன் கால்ல படும். தள்ளினவனைச் சொல்றதா இஸ்தவனைச் சொல்றதா? நேரம்தான். தெகிரியமா இரு.''

செல்லத்தம்பியின் கைகள் நடுங்கின. முதுகு வியர்த்தது. நெற்றியில் பொடித்தது.

''எங்க வூடு உனக்கு?''

''அச்சரப்பாக்கம்.''

''பெத்தவாக உசிரோட இருக்காங்களா?''

''அம்மா இருக்குது.''

''சொல்லி அனுப்பிச்சிடு.''

''அனுப்பணும்.''

''சரி வா.''

''எனக்கு வாணாம்.''

''ஏன் இப்டி பதறுது உனக்கு?''

''எங்கம்மா...எங்கம்மா...எங்கம்மாளவ நெனைச்சுத்தான்.'' செல்லத்தம்பி மறுபடி சரிந்து உட்கார்ந்தான். விசித்து அழத் துவங்கினான். கௌசல்யா அவன் எதிரே நெருக்கமாய் உட்கார்ந்து அவன் தோளில் கை வைத்துக் கொண்டாள். கொஞ்சம் அழுது ஓயட்டும் என்று காத்திருந்தாள். புடவைத் தலைப்பால் அவன் முதுகு வியர்வையைத் துடைத்தாள்.

''வாணாம் கௌசல்யா.'' செல்லத்தம்பி அவள் உபசரணைகளை லேசாய் மறுத்தான்.

''சரி. நான் ஒண்ணும் . செய்யல. நீயும் பயம் காட்டாதே. தெகிரியமா இரு. ராவுத்தர் இருக்கச் சொல்ல என்ன பயம்? தெருக்கோடி முனீஸ்வரனுக்கு ஒரு ரூபா குடுத்துட்டுப் போ. எந்தக் கஷ்டமும் பாரம் காட்டாத பூடும். இங்கித்திப் போலீஸ் எல்லாம் எனக்குத்



தெரியும். போ. உம்மேலே கை வைக்காத நான் பார்த்துக்கறேன்.''

''மத்தியானமே ரிப்போர்ட்டு ஆயிடும். ராவுத்தர் போய்ச் சொல்லிடுவாரு. ஒரு தபா ஊருக்குப் போயிட்டு வரக்கூட முடியாது.''

''அம்மாக் கிழவிகிட்டப் போய் என்ன பண்ணப் போறே. அது வவுத்துல அடிச்சிக்கினு அளுவும். சொல்லாத வுட்ரு.''

''அப்படித்தான் செய்யணும். கௌசல்யா எனக்கு ஒரு உதவி செய்துடு. மாசத்துக்கு ஒரு தபா வந்து உள்ளார என்னைப் பாரு. உனக்கு ஆனதை நான் கொடுத்திடறேன். என்னாண்டை நூத்தி நாப்பது ரூபா இருக்கு. வச்சுக்க. யாரும் பார்க்க வராட்டி பைத்தியம் புடிச்சிடும் எனக்கு.''

''அதுக்கென்ன இப்போ. நம்ம தெரு ஆளு மாட்டிக்கினு பாக்கறதுதான் வழக்க மாச்சே. உன்னை மட்டும் வுட்ருவமா.''

ஆனால் மாதம் ஒரு முறை சிறையில் வந்து பார்ப்பது எளிதில்லை. அதற்கு மெனக்கிட வேண்டும். சிறை வாசலில் காலையிலிருந்தே காத்திருக்க வேண்டும். மனைவி என்கிற உறவு சொன்னால்தான் எடுபடும். கௌசல்யா தண்ணித் தொட்டித் தெருவில் நிறையப் பேருக்கு மனைவி என்பதாய் மனுப் போட்டுப் பார்த்து வருவாள்.

''நூட்டு வாணும். சின்னப் பையா. நான் வரேன். என்னாண்ட விடு அதை. இதுக்கோசரமா காலங் காலேல முட்டிக்கினு மோதிக்கினு அழுதே. டமாஸுதான். போ நீ.

---

● கிரிக்கெட் டெஸ்ட் பந்தயங்களில் 18 வயதுக்குக் குறைவானவர் இது வரை 11 பேர்கள் மட்டுமே அறிமுகப் படுத்தப்பட்டுள்ளனர். இவர்களில், ஆறுபேர் பாகிஸ்தானைச் சேர்ந்த வர்கள். ஹனீப் முகம்மது, இண்டிகாப் ஆலம், முஷ்டாக் முகம்மது, அப்டாப் பலோச், நசிமுல் கனி, காலித் ஹுசைன் ஆகியோர்தான் அந்த ஆறு பேர்.,.!

● இங்கிலாந்தைச் சேர்ந்த ஜே.சவுத்தர்டன் தமது 49வது வயதில் ஆஸ்திரேலியாவிற்கு எதிராக 1976-77 ஆம் ஆண்டில் விளையாடினார்.

● பாகிஸ்தானிய விக்கெட் கீப்பர் வசிம்பாரி இதுவரை ஆடியுள்ள டெஸ்ட்டுகள் 69! (டிம்)

-விக்கெண்ட் ரெவ்யூ -ராஜி ராதா

---



உன்னே போறு ராவுத்தரே துட்டுக் குடுத்து அனுப்புவாரு.''

''நான் வரேன்.'' செல்லத்தம்பி எழுந்தான். பாக்கெட்டில் கை விட்டுப் பத்து ரூபாயை வைத்துக் கொண்டு மீதியைக் கௌசல்யாவிடம் கொடுத்தான். நகர்ந்தவனைக் கௌசல்யா பிடித்திழுத்தாள்.

''உள்ள வந்துட்டுப் போ.'' கையோடு இழுத்துக் கொண்டு கித்தான் துணிக்குள் நுழைந்தாள். உள்ளே சணல் நெடி அடித்தது. நசுங்கிப் பழுப்பேறிய தலையணை கிடந்தது. கௌசல்யா அவனை மல்லாக்கச் சாய்த்துக் கன்னத்தில் முத்தமிட்டாள்.

செல்லத்தம்பி செயலற்று இருந்தான். சற்று நேரம் தன்னை மறந்து விட்டுக் கூடலுக்குத் தயாராகும் கௌசல்யாவை வியப்புடன் கவனித்தான். நெல்லூரில், புத்தூர் சந்திப்பில், தொழுப்பேடு தங்கலில் பார்த்த நிறைய பெண்கள் மனசில் முட்டினார்கள்.

''உனக்கு என்ன வயசாவுது கௌசல்யா?''

''அட்ரு சக்கை. வயசு கேக்கத் தோணுதோ? நேத்துதான் சமைஞ்சேன். என்ன இப்போ அதுக்கு?''

''அதில்லே. எத்தினி நாளைக்கு இப்படி பொரளப் போறே.''

''என் மம்முத ராசா கம்பி எண்ணிட்டு வெளிய வந்து தாலி கட்ற வரைக்கும்.''

''என்னைக் கட்டிக்கிறியா?''

''பைத்தியமா உனக்கு. கூட்டத்துக்குச் சரின்னுட்டேனே.''

''உன்னாண்ட படுத்துக்கறத்துக் கோசரம் சொல்லலே கௌசல்யா. இந்தத் தெருவுல நானும் பெரிய மனுஷன் ஆவணும். லாரி புடிக்கணும் போர்டு போடணும்.''

''போடலாம்; போடலாம்.''

மேலே விழுந்தவளைச் செல்லத்தம்பி திடமாய் விலக்கினான். மிரண்டு எழுந்தவளை மார்போடு அணைத்துக் கொண்டான்.

''உன்னாண்டை ஒண்ணு சொல்றேன். இந்தத் தெருவுல போர்டு கட்டத்தான் போறேன். லாரி ஓட்டத்தான் போறேன். போர்டு போட்ட அன்னிக்கு உன்னை மயித்தைப் பிடிச்சு இழுத்து உதட்டோட வைக்கத்தான் போறேன். ஆம்பளை நினைச்சா முடியாத காரியமில்லே. நீ சொன்ன சொல்லு மறக்காத உள்ளே வந்து பாரு. அது போதும்.''

எழுந்து திரையை விலக்கி வெளியே நடந்தான். சாக்கடைச் சந்துப் பக்கமாய் நடந்து தெருவுக்கு வந்தான்.

வங்கக் கடலில் கீழ் வானம் சிவக்கத் துவங்கியது.

கரீம்பாய் வண்டி அடியில் தட்டிப் போட்ட படுக்கையிலிருந்து எழுந்து வந்து வெளிறிய வெளிச்சத்தில் வண்டியின் முன்புறம் தொட்டுப் பார்த்தார். பம்பருக்கு மேலே வளைந்திருந்தது. ஹெட் லைட் ரிம் நசுங்கியிருந்தது. பெயிண்ட் பூச்சு சிதறியிருந்தது. தடவிப் பார்க்கையில் ரேடியேட்டர் கிரில்லில் ஏதோ தட்டுப்பட அதை எடுத்து விளக்கு வெளிச்சத்தில் பார்த்தார், பதறி எடுத்ததைக் கீழே போட்டார்,



## ஆண் - பெண் நல்வாழ்வு வாழ அழைக்கிறோம்

பிரபல பழனி வைத்திய திலகம், வைத்யராஜ்

**டாக்டர் எஸ். காளிமுத்து, R.M.P. (IND). V.V.C. A.M.I.H.,**

அவர்களிடம் சிகிச்சை பெற்று குணமும், மகிழ்ச்சியும் அடையுங்கள்

சித்த வைத்தியத்தில் இந்தியாவின் சுற்றுப் பயணத்தில் தனிச் சிறப்புப் பெற்றவர், சித்த வைத்திய மாமன்னன், சித்த வைத்தியச் செம்மல், சித்த வைத்தியக் கலைவேந்தன், வைத்திய திலகம், வைத்யராஜ், பல பாராட்டுப் பட்டங்களும், மெடல்களும், பதக்கங்களும் பெற்றவர். பல தலைமுறைகளாக வைத்தியக் குடும்பத்தின் ஏக வாரிசாகத் திகழ்பவர், முன்னாள் சென்னை, நாட்டு வைத்தியக் கல்லூரியில் வி.வி. கோர்ஸ், சித்த வைத்தியமும் ஆங்கில வைத்தியமும் பயின்றவர். ஹோமியோபதியிலும், ஆயுர்வேதத்திலும் அரசாங்கத் தாராம் பதிவு பெற்றவர். முதன் முதலாக டெல்லி, பூனா, பம்பாய், பெங்களூர் மற்றும் தமிழகம் எங்கும் சுற்றுப் பயணம் செய்து, பல்லாயிரக் கணக்கான வியாதியஸ்தர்களைக் குணப்படுத்தி நற்சாட்சிகளும் பெற்றவர். உலகப் புகழ் பெற்ற சிட்டுக்குருவி லேகியம், தங்கபஸ்பம் போன்ற ஏராளமான மருந்துகள் தயாரித்து தனிப் பெயர் பெற்றவர் இவரே.

**மேற்கண்ட தொந்தரவுகள் இருந்தால் அலட்சியம் செய்யாதீர்கள்**

தளர்ச்சி, குழந்தை பாக்கியம் இல்லாத பிரச்சினை, உடல் பலவீனம், இல்வாழ்க்கையில் மகிழ்ச்சிக் குறைவு, உடலே பலவீனம், ரத்தக் குறைவு, சோர்வு, தலைவலி, உஷ்ணம், சோம்பல், கைகால் அசதி, தேக வலி, நித்திரைக் குறைவு, ஆயாசம், பீதி, வெட்கம், பயம், வெறுப்பு, உறுப்புக்கள் தளர்வு, அடிக்கடி நெஞ்சு, சரும நோய்கள், வயிற்றுவலி, ஆ. இருமல், இளைப்பு, தும்மல், நவமூல வியாதிகள், வாய்வு, மற்றும் இதில் குறிப்பிடாத வியாதியஸ்தர்களுக்கு எமது 86 வருட அனுபவ மருந்துகளால் சுகவாழ்வு வாழலாம். ஆர்டருடன் மருந்து விவரங்களைக் குறிப்பிட்டு வி.பி.பி. தபால் பார்சலில் பெறலாம். வி. பி. பி. தபால் செலவு இலவசம். கேம்பிலும், நேரிலும் டாக்டரிடம் மருந்துகள் பெறலாம்.

(பழனி சித்தர் மருந்துகளே பாரில் சிறந்தவை என்பது உலகம் அறிந்ததே)

ஒரு மாத சிகிச்சை மருந்துகள்

---

**தங்கபஸ்பம், ஸ்பெஷல் செட் ரூ. 330, தங்கபஸ்பம் சிட்டுக்குருவி லேகியம் 30 வேளை ரூ. 60, 60 வேளை ரூ. 120, 90 வேளை ரூ. 180**

---

**ஸ்பெஷல் லேகியம், ஸ்பெஷல் பஸ்பம் (மிக உயர்தரம்) ரூ. 90**

---

**ஆ. இருமல் செட் ரூ. 124, சரும நோய் செட் ரூ. 140, 260, வயிற்று வலி செட் ரூ. 92**

---

**எங்கள் மாபெரும் வெற்றிகரமான மாதாந்திர சுற்றுப்பயண தேதி, விலாசங்கள் கவனிக்கவும் :**

1-ந் தேதி திருநெல்வேலி, நெல்லை லாட்ஜ், ஜங்ஷன் ரோடு, போன் 147, காலை 8 மணி முதல் 12 மணிவரை
1-ந் தேதி நாகர்கோவில், பகல் 2 மணி முதல் 4 மணிவரை, ஸ்ரீ உடுப்பி கிருஷ்ண பவன், தபாலாபீஸ் சந்திப்பு
2-ந் தேதி மதுரை மணிக்கபே, டவுன்ஹால் ரோடு, போன்: 22019 காலை 8 முதல் பகல் 12 மணி வரை
2-ந் தேதி புதுக்கோட்டை, மாலை மணி 4 முதல் 5-30 மணி வரை, சாந்தி லாட்ஜ் (வசந்தா லாட்ஜ்) போன்: 46
3-ந் தேதி காரைக்குடி, காலை 9 மணி முதல் 11 மணி வரை, ஏ.வி.எம்.பி.எல். ரெஸ்ட் ஹவுஸ், போன்: 309
3-ந் தேதி பட்டுக்கோட்டை, பகல் 2 மணி முதல் 3-30 மணி வரை, ஹோட்டல் அலங்கார், மணிக்கூண்டு சமீபம்
3-ந் தேதி மன்னார்குடி, மாலை 4-30 மணி முதல் 6 மணி வரை, மன்னை லாட்ஜ், ஸ்டேட் பாங்க் அருகில்
4-ந் தேதி திருச்சி, ஹோட்டல் அஜந்தா, ஜங்ஷன் ரோடு, காலை 8 மணி முதல் பகல் 2 மணி வரை, போன்: 4501
4-ந் தேதி கரூர், மாலை 3-30 மணி முதல் 5 மணி வரை, பெரியார் லாட்ஜ், ஜவஹர் பஜார்
5-ந் தேதி தஞ்சாவூர், காலை 8 மணி முதல் 12 மணி வரை, ராஜா ரெஸ்ட் ஹவுஸ், போன்: •57
5-ந் தேதி திருவாரூர், மாலை 2 மணி முதல் 4 மணி வரை, அபூபக்கர் பில்டிங், நாகை ரோடு, விஜயபுரம்
5-ந் தேதி நாகப்பட்டினம், தினகர் விலாஸ், ரயில்வே ஸ்டேஷன் எதிர், மாலை 5 மணி முதல் 6 மணி வரை
6-ந் தேதி காரைக்கால், அசோக் லாட்ஜ், பஸ் ஸ்டாண்டு எதிர், காலை 8 மணி முதல் 10 மணி வரை
6-ந் தேதி கும்பகோணம், காலை 12 மணி முதல் 2 மணி வரை, தாஜ்மஹால் லாட்ஜ், பொற்றாமரைக்குளம்
6-ந் தேதி மாயவரம், மாலை 3 மணி முதல் 4-30 மணி வரை, காளியாகுடி லாட்ஜ், பெரியகடை வீதி, போன் 460
6-ந் தேதி சிதம்பரம், மாலை 5-30 மணி முதல் 7 மணிவரை, ஜெயராம் லாட்ஜ்
7-ந் தேதி பாண்டிச்சேரி, காலை 8 மணி முதல் 9-30 மணி வரை, (அருணா லாட்ஜ்) பாரீஸ் லாட்ஜ், ஜவஹர்லால்
7-ந் தேதி திருவண்ணாமலை, காலை 10 மணி முதல் 12 மணி வரை, மாடர்ன் கபே, [தேரு வீதி, போன்: 352
7-ந் தேதி செங்கல்பட்டு, மாலை 4 மணி முதல் 6 மணி வரை கணேஷ் லாட்ஜ்
7-ந் தேதி கடலூர் என்.டி. காலை 10-30 மணி முதல் 12 மணி வரை, ஹோட்டல் பிருந்தாவனம்
10, 11-ந் தேதி சென்னை, காலை 9 மணி முதல் 12 மணி வரை, 3 முதல் 5 மணி வரை நியூ உட்லண்ட்ஸ் ஹோட்டல்
12-ந் தேதி காஞ்சிபுரம், ஸ்ரீராமா லாட்ஜ், நெல்லுக்காரத் தெரு, காலை 10 மணி முதல் 12 மணி வரை
12-ந் தேதி ஆரணி பகல் 3 மணி முதல் 5 மணி வரை கிரிஜா லாட்ஜ், காந்தி சிலை எதிரில், போன்: 83111
13-ந் தேதி வேலூர், என். ஏ. காலை 10 மணி முதல் 12 மணி வரை, அஜீஸ் மேன்ஷன், போன்: 123
13-ந் தேதி குடியாத்தம், பகல் 3 மணி முதல் 5 மணி வரை, அலங்கார் லாட்ஜ்
13-ந் தேதி கிருஷ்ணகிரி, காலை 9 மணி முதல் 10 மணி வரை, ஸ்ரீராம் லாட்ஜ், போன்: 129
13-ந் தேதி தர்மபுரி, பகல் 12 மணி முதல் 1 மணி வரை, சீனிவாசா லாட்ஜ்
13-ந் தேதி சேலம், பகல் 2 மணி முதல் மாலை 5 மணி வரை, லட்சுமி ராஜ்பவன், போன்: 2301
14-ந் தேதி மதுரை காலை 9 மணி முதல் 12 மணி, மாலை 2 மணி முதல் 4 வரை, சந்தானம் லாட்ஜ்
15-ந் தேதி ஈரோடு, காலை 10 மணி முதல் 12 மணி வரை, நவபவனம் லாட்ஜ், போன்: 907
15-ந் தேதி திருப்பூர், பகல் 2 மணி முதல் 4 மணி வரை, ஸ்ரீ கிருஷ்ணா லாட்ஜ், போன்: 186
16-ந் தேதி கோவை காலை 9 மணி முதல் 12 மணி வரை, விஜயா லாட்ஜ், போன்: 22669
17, 18, 19-ந் தேதி சென்னை நியூ உட்லாண்ட்ஸ் ஹோட்டல் காலை 10 முதல் 12 மணி வரை, மாலை 3 முதல் 5 வரை [போன்: 83111

22-ந் தேதி கோவை, காலை 10 மணி முதல் பகல் 12 மணி வரை ஹோட்டல் ரூபு
22-ந் தேதி பொள்ளாச்சி, மாலை 2 மணி முதல் 4 மணி வரை, கோபால் பில்டிங், போன்: 666
23-ந் தேதி முதல் 30-ந் தேதி வரை பழனி தலைமை வைத்தியசாலை.

---

எமது மருந்துகள் கிடைக்கும் இடம் : **கவிதா எண்டர்பிரைசஸ்,**
**26, வாலர்ஸ் ரோடு, (மவுண்ட் ரோடு, பி. ஆர். & சன்ஸ் அருகில்) சென்னை-600 002**

---

GOVT. REGD. T.M. No. 204841 REGD. 15443 MFG. LIC. No. 5

போன் : 316, 316-A, 420 தந்தி : சித்தர்

## பழனி சித்தர் வைத்தியசாலை, பழனி-624 601

(பழைய தாராபுரம் ரோடு, (இந்தியாவின் மாபெரும் வைத்திய ஸ்தாபனம்)

# முத்தான 3 வாய்ப்புகள்!

பிப்ரவரி

10
வியாழன்
வரிசை: எல்ஏ, எல்பி
வெளியிடும் நாள்:
29.1.83

20
ஞாயிறு
வரிசை: எல்சி, எல்டி
வெளியிடும் நாள்:
10.2.83

28
திங்கள்
வரிசை: எல்இ, எல்எப்
வெளியிடும் நாள்:
19.2.83

முக்கனி, முப்பால், முத்தமிழ்,
இதன் வரிசையிலே இனி மற்றுமோர் முத்திரை!

## தமிழ்நாடு அரசு பரிசு சீட்டு

மாதம் மும்முறை
10, 20, 30 தேதிகளில் வழங்கும் முத்தான வாய்ப்பு!

இரண்டு
முதல் பரிசு ரூ. **100000**
வீதம்

*மற்றும் ஏராளமான பரிசுகள்!*
*தாராளமான வாய்ப்புகள்!!*
*விரைந்திடுவீர்! வாங்கிடுவீர்!! வென்றிடுவீர்!!!*

இயக்குநர், தமிழ்நாடு பரிசு சீட்டு திட்டம்
அரசினர் தோட்டம், சென்னை-600 002.

EP-DIPR

தண்ணித் தொட்டித் தெரு ஓரமாய் நகப் பூச்சுடன் கூடிய சுண்டு விரல் தனியே கிடந்தது.

கரீம்பாய் முகத்தை வேதனையுடன் துடைத்துக் கொண்டார். அருகில் வந்த செல்லத்தம்பியிடம் கீழே விழுந்ததைச் சுட்டிக் காட்டினார். செல்லத்தம்பி குனிந்து பார்த்துவிட்டு அருகே கிடந்த காகிதத்தில் அதைச் சுற்றிக் கொண்டான்.

கௌசல்யா மடியில் சுருட்டிக் கிடந்த ரூபாய்களைப் பிரித்து எண்ணினாள். நூற்றி நாற்பத்தியேழு இருந்தது. சில நோட்டுகள் பிரிப்பது கூடச் சிரமமாயிருந்தது.

''சம்பாதிச்சது அத்தனையும் போட்டுப்- பூட்டான் போலிருக்குது. இருந்துட்டுனாப் போகக் கூடாது. உஸ¬க்கு ன்னு எழுந்துப் பூட்டான். ஜெயிலுன்னாப் பதறிப் பூடுறானுங்கப்பா. நாலு ஊரு நிக்காத சுத்தறவனை பத்துக் கடைல மாறிமாறித் தின்றவனைப் புடிச்சி ஜெயில்ல போட்டா பேஜாருதான். மாட்டுனாத்தானே உள்ளே போவான். மாட்டாத பூட்டா... அடிச்சது யாருன்னு தெரியாத பூட்டா... டேய் சின்னப் பையா அதுக்குள்ள என்னண்ட துட்டைப்போட்டுட்டு...''

கௌசல்யா வெளியே தெருவுக்கு வந்த போது ராவுத்தர் லாரியைச் சுற்றி நிறையப் பேர் நின்றிருந்தார்கள்.

''அரை அவர் வேலே, கரீம்பாய். டிங்கர் வேலைதான். படபடன்னு தட்டி நிமித்திடறேன். அடி வாங்கினதே தெரியாத பூடும். மஞ்சப் பெயிண்ட் புகை புடிச்சா மாதிரி காட்னா போதும், வேலே பார்த்த வண்டின்னு சத்தியம் பண்ணுக்கூட நம்ப மாட்டான்.'' கண்ணப்பன் சத்தம் போட்டுப் பேசினான்.

''ராவுத்தரை ஒரு வார்த்தை கேட்டுருவம், கண்ணப்பா.''

''மசூதி போய்ட்டுப் பத்து மணிக்கு வருவாரு. அதுவரைக்கும் அப்படியே நாலு ஆளுங்க பாக்க நிக்கணுமா? வண்டியை எடுவாணும். எடுக்கக் கூட வாணும். இங்கியே பிரிச்சுத் தட்டிடறேன். என்னா சொல்றே?''

கரீம்பாய் தவித்தான். மறைத்து விடலாமா? அடிபட்டது இல்லே என்று சொல்லி விடலாமா? ராவுத்தரிடம் மறைக்க வேண்டாம். போலீஸில் மறைத்து விடலாம்.

''சரி. கடை தொறக்கறத்துக்குள்ள தட்டிரு.''

கண்ணப்பன் நெளிந்திருந்த பம்பரில் காலை வைத்து அதன் நுனியைப் பலம் கொண்ட மட்டும் இழுத்தான். இரும்பு இலேசில் நிமிர்வதாய் இல்லை. லாரி டயருக்கு அடியில் கொடுக்கும் கட்டையை இடைவெளியில் கொடுத்து மீண்டும் தூக்கினான். இப்போது இன்னும் இரண்டு பேர் கூட உதவி செய்தார்கள். நெளிவை நேராக்க முழு பலமும் பிரயோகித்தார்கள். பம்பர் நெளிந்து நிமிர்ந்தது. 'தூக்குக் கொஞ்சம்' என்று கண்ணப்பன் குரல் கொடுக்க மேலும் பலம் காட்டினார்கள். பளீரென்று பம்பர் இரண்டாய் உடைந்தது.

'ஐயோ' என்று செல்லத்தம்பி கத்தினான்.

அவனுக்குச் சிறைவாசம் உறுதியாகிவிட்டது.

''லொக்கை வண்டிப்பா'' கண்ணப்பன் ஆத்திரத்துடன் வண்டியை எட்டி உதைத்தான்.

நடேச முதலி மெல்ல நடந்து ராவுத்தர் வீடு நோக்கிப் போனார். அவர் போவதை இரண்டு மூன்று பேர் அர்த்தம் நிறைந்த பார்வையோடு பார்த்தார்கள்.

கௌசல்யா செல்லத்தம்பியை நெருங்கி ''முதலியாரை நிறுத்து. முதலியாரை நிறுத்து'' என்று அடிக்குரலில் எச்சரித்தாள்.

செல்லத்தம்பி மாட்டேன் என்று தலையாட்டிவிட்டு நடைபாதையில் குத்துக்காலிட்டு உட்கார்ந்து கொண்டான்.

வெயில் உறைக்க ஆரம்பித்தது.

(தொடரும்)

---

## வாசகர் கருத்து



● ஆறு வார சிறு தொடர்தான் என்றாலும் மனத்தில் ஆழமாய்ப் பதியும்படி செய்து விட்டார் ஹேமா ஆனந்த தீர்த்தன். கடைசியில் சிவகுரு நண்பனுக்கு எழுதும் கடிதம் நண்பனுக்கு மட்டுமல்லாமல் ''பெண்ணாசை' பிடித்தவர்களுக்கும்தான்.

ஊசூர்வெளிகடை ராஜன்

● தீபாவளி மலரில் ஹேமா ஆனந்ததீர்த்தன் எழுதாத குறையைப் 'பெண்ணாசை' குறுநாவல் மூலம் தீர்த்து விட்டார்.

கோபி இளஞ்சேரன்

● ''பெண்ணாசை''க்குத் தற்கொலையே தண்டனை என்பதாக முடிக்கப்பெற்ற குறுகிய காலத் தொடர், நீண்டதொரு சிந்தனைக்குத் தொடக்கம் எனப் பெண்ணாசை பிடித்தவர்களுக்கு அமைந்திருப்பதாக நினைக்கிறேன்.

திருநெல்வேலி சாமி ஆறுமுகம்

● ஹேமா ஆனந்த தீர்த்தனின் 'பெண்ணாசை' சிறிய கதையானாலும் அரிய கருத்தைக் கொண்டுள்ளது.

கதிரிமங்கலம் வி. ரங்கநாதன்

● டெலிகேட்டான ஒரு சப்ஜெக்ட். ஏழை வீட்டுப் பெண்களை இழிவுபடுத்தும் எண்ணற்ற பண முதலைகளுக்குப் பாடம்.

சென்னை-45 கணபதி சுப்பிரமணியன்

● 'முறை தவறிய பெண்ணாசை முறையல்ல' என்பதைக் குறு (தொடர்) நாவல் மூலம் சலனமற்ற எழுத்தோட்டத்தில் வெளியிட்ட ஆசிரியருக்கும், அழகோவியம் வரைந்த ஜி. கே. மூர்த்திக்கும் 'என்னாசை'யான வாழ்த்துக்கள்.

பூவிருந்தவல்லி கு. ப. ரகுநாதன்

# பெண்ணாசை

CHARMINAR

THE VAZIR SULTAN

TOBACCO CO. LTD.

# உங்களைப் போன்றவர்களை திருப்தி செய்ய சார்மினாரால்தான் முடியும்

சற்றே இளைப்பாறுவீர்! ஒரு சார்மினார் புகைப்பீர்

சிகரெட் குடித்தல் உடல் நலத்திற்குத் தீங்கானது

STATUTORY WARNING CIGARETTE SMOKING IS INJURIOUS TO HEALTH

CAS/JS-262-203 TAM





※ **Fuorescein Angiography** கருவியும், அது எடுத்த விழித்திரையின் புகைப்படமும். வளைந்து வளைந்து ஓடுவன விழித்திரையின் ரத்த நாளங்கள். 4 என்று அடையாளமிட்டிருப்பது ரத்தம் கசியுமிடம்.




**பாடத் தெரிந்தவர் யாரோ பாடிச் சென்று விட்டார்: 'கண்ணிற்சிறந்த உறுப்பில்லை!'.**

எவ்வளவு நிதர்சனமான உண்மை! கண் என்ன சாதாரண உறுப்பா, இருந்தால் இருக்கிறது போனால் போகிறது என்று விட்டுவிட? கண்ணாடி முன்னால் பார்த்துக் கொண்டு ரசிப்பதற்கு அல்லது வெறுப்பதற்கு — சாலையில் பார்த்து நடப்பதற்கு அல்லது 'பார்த்துக்கொண்டு' நடப்பதற்கு... எதற்குத்தான் கண் பயன்படவில்லை?

இன்றைக்கு அதிகமாகக் காணப்படும் நோய்களில் தலையாயது நீரிழிவு நோய். வயிற்றுக்குள் உள்ள பான்கிரியாஸ் என்கிற சுரப்பி சுரக்கும் 'இன்சுலின்' குறைவதால் ஏற்படும் நோயே நீரிழிவு. (சர்க்கரை வியாதி) இந்த இன்சுலின் குறைந்தால் சர்க்கரை ஜீரணமாவதில்லை. அதனாலேயே 'சர்க்கரை வஸ்துக்கள் சாப்பிடாதீர்கள்' என்ற 'பல்லவி'. சர்க்கரை நோயாளிகளுக்குப் பாதிக்கப்படும் உறுப்புக்களில் அதி முக்கியமான உறுப்பு — 'கண்'.

காட்சி காமிரா பிலிமில் பதிவாவது போல் நாம் காணும் காட்சி விழித் திரையில் பதிகிறது. விழித் திரையே 'ஒளி வாங்கி'. (Receptor) இது வெறும் நரம்பு நார்களால் ஆனது. இந்நார்களைப் போஷிப்பதற்காகத் தனியாக ரத்தக் குழாய்கள் உள்ளன.

சர்க்கரை வியாதி கட்டுப்படுத்தப்படாத போதும், கட்டுப்படாதபோதும் விழித் திரையில் விளைகிற மாற்றங்கள் பார்வையை அழித்து விடும். இவ்வகையில் இரண்டு சத வீத நீரிழிவு நோயாளிகள் ஆண்டுதோறும் அவதியுறுகிறார்கள் என்கிறது ஓர் ஆதார பூர்வமான புள்ளி விவரம். பார்வையையே அழித்து விடுமளவுக்கு அப்படி என்னதான் மாற்றங்கள்?

விழித்திரையில் ஓடுகின்ற ரத்தக் குழாய்களில் சில கிளைகள் ஆங்காங்கே விரிவடைகின்றன. அவ்வாறு விரிவடைந்த ரத்தக்

※ **Laser Photocoagulator** கருவி. விழித்திரையில் ஒளி பாய்ச்சப்பட்டுச் சிகிச்சை தரப்படுகிறது.





## அருள்வாக்கு

நாம் அசந்து தூங்கிக் கொண்டிருக்கும்போது கூட ஒரு எறும்பு மேலே ஊறினால் அதை அப்படியே தேய்த்து விடுகிறோம். கொஞ்சம் குளிர் காற்று அடித்தால் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொள்கிறோம். பக்கம் மாற்றிப் படுக்கிறோம். காலமே (காலையில்) எழுந்திருககிறபோது நமக்கே இது எதுவும் ஞாபகம் இருப்பதில்லை. அதாவது இந்த விஷயங்கள் பூர்ணமாக நமது ப்ரக்ஞைக்கு எட்டாமலே இப்படியெல்லாம் பண்ணியிருப்போம். ஆனாலும் அந்தத் தூக்க நிலையில் கூட சரீராபிமானம் போகாததால்தான் சரீர ரக்ஷணைக்காக இந்தக் காரியங்களைப் பண்ணியிருக்கிறோம். எந்தக் காரியமானாலும் அதை மூளையின் டைரக்ஷனின் கீழ் நரம்புமண்டலம்தான் பண்ணுகிறது. அது உள்ளே இத்தனை சரீராபிமானம் ஊறியதாக இருக்கிறது. நம் இச்சையின் பேரில் வாலண்டரியாக இல்லாமல் தன்பாட்டுக்கு நரம்புகள் அநேக காரியங்களைப் பண்ணுகின்றன. கழுத்து, இடுப்புப் பக்கங்களில் ஏதாவது நிமிண்டுகிற மாதிரிப் பட்டால் 'குறுகுறு' என்று பண்ணிச் சிரிப்பாக வருகிறது. பயமாயிருந்தால் 'அல்ப ஸங்கை' வருகிறது. பெரிய கஷ்டம் வந்தாலோ வயிற்றையே கலக்குகிறது. ஒருத்தன் கொட்டாவி விட்டால் மற்ற பேரும் கொட்டாவி விடுகிறோம். இதெல்லாம் நரம்புகளின் 'இன்வாலண்டரி'க் காரியங்கள்.

நிஜ மௌனத்தில் எப்படி இருக்கும்? உடம்பின் மேல் மலைப் பாம்பே போனாலும் தெரியாது. ஒரு Reflexம் இருக்காது. குளிரோ, வெய்யிலோ எதுவானாலும் தெரியாமல் அடித்த சிலையாக நிஷ்டையில் இருப்பான். தேஹாத்ம புத்தி அடியோடு போய்விட்டதால் தேஹ ரக்ஷணை பண்ணிக்கொள்ள வேண்டுமென்று உள்ளூற இருக்கும் அபிமானம் இன் வாலண்டரியாகக் கூட இலலாமல் போய், அவனுடைய நரம்பு சலிக்கவே சலிக்காது. அவன்தான் எல்லாப் புலன்களையும் அடக்கி வெற்றி கண்ட 'ஜிதேந்திரியன்.'

-ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள்

குழாய்களில் ரத்தம் கசியக் கசியப் பார்வை மங்கி வரும். சில அசாதாரண ரத்தக்குழாய்கள் வேறு தோன்றி அவற்றிலும் ரத்தம் கசிவதுண்டு. பாதிக்கப்பட்ட கண்ணுக்கெதிரே கரும் புள்ளி அல்லது கரும் படலம் தோன்றி நகர்வது போன்ற உணர்வு ஏற்படலாம். ரத்தக் கசிவின் அளவைப் பொறுத்துப் பார்வை இழப்பு இருக்கும்.

ஆகவேதான் ஒரு 'சின்ன' அறிவுரை: சர்க்கரை வியாதிக்காரர்களே, ஆண்டுக்கொரு முறை கண் மருத்துவரைப் 'பார்த்து' விடுங்கள்!

நவீன மருத்துவம் கண்ணில் ஏற்படும் மாற்றங்களைத் துல்லியமாகக் கணிக்கும் வழியைக் கண்டுபிடித்திருக்கிறது.

'Fluorescein Angiography' எனப்படும்கருவி மூலம் விழித் திரையில் ஓடுகிற ரத்தக் குழாய்களை அப்பட்டமாகப் படம் எடுக்க முடியும். (படத்தைப் பாருங்களேன்) எந்தெந்த இடங்களில் எந்தெந்த ரத்தக் குழாய்கள் எவ்வளவு தூரம் பாதிக்கப்பட்டுள்ளன என்பதைத் துல்லியமாய் அறியலாம்'. கண்ணுள் நோக்கி' Opthalmoscope எனப்படும் கருவி மூலம் நேரிடையாகவும் கண் டாக்டர் பார்க்கலாம். :பிறகு வேண்டாத ரத்தக் குழாய்களையும், கசிகிற ரத்தக் குழாய்களையும் 'பொசுக்கி'விட வேண்டியதுதான் சிகிச்சை. 'மிக மிக மிக மெல்லிய இந்த ரத்தக் குழாய்களைப் பொசுக்குவதா? எப்படி?' என்று அதிசயிக்க வேண்டாம். Xenon என்ற உயர் அழுத்த ஆர்க் விளக்கு அல்லது 'லேஸர்' எனப்படும் கருவியை உபயோகித்துப் பெறப்படும் ஒளி சூரிய ஒளியை விடப் பன்மடங்கு சக்திவாய்ந்ததாகும். இந்த ஒளியினை விசேஷக் கருவி மூலம் விழித் திரையில் ரத்தம் கசிகிற இடங்களில் அல்லது அசாதாரண ரத்தக் குழாய்களின் மேல் படும்படி செய்வார்கள். அப்படிச் செய்யும்போது ரத்தம் கசிவது நின்று போகிறது. அசாதாரண ரத்தக் குழாய்கள் கருகிப் போகின்றன. இச்சிகிச்சை முறைக்கு 'ஒளியினால் உறையச் செய்தல்' (Photocoagulation) என்று பெயர். இன்று நம் நாட்டில் முக்கிய நகரங்களில் கிடைக்கும். (குறிப்பாக சென்னையில்) இந்த நவீன சிகிச்சை முறை விழி பாதிப்புள்ள நீரிழிவு நோயாளிகளுக்கு வரப்பிரசாதம். முழுமையான பார்வையை இச்சிகிச்சை மீட்டுத் தராது எனினும், இருக்கிற பார்வையையேனும் நிலைப்படுத்தும். இச்சிகிச்சையைத் தர சாதாரணமாகப் பதினைந்து முதல் இருபது நிமிடங்கள் வரை தேவைப்படலாம். நீரிழிவின் காரணமாக விழித் திரை மாற்றங்கள் வராமல் தடுப்பது எப்படி? டாக்டர்கள் கூறுகிறவாறு ஆரம்ப நிலையிலிருந்து நீரிழிவைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொண்டு 'வாயை, வயிற்றை' மட்டுமே பேணாது உடல் முழுவதையும் காத்து வந்தால் இவற்றிலிருந்து தப்பிக்கலாம். One pound of prevention is better than Ten tonnes of cure என்று சும்மாவா சொன்னார்கள்?

- டாக்டர் இ.எஸ்.எஸ். இராமன்



## கல்கி-பாரதி நூற்றாண்டுப் போட்டி-8

நூறாண்டு கண்ட பாரதியின் கவிதை வரிகளைக் கண்டுபிடித்து எடுத்தெழுதும் போட்டியில் ஆயிரக்கணக்கான ரஸிகர்கள் பங்கெடுத்துக் கொண்டது நம்மைத் திகைப்பில் மூழ்கடித்தது. கவியரசர் பாரதியிடமும் அவரது கவிதைகளிலும் கல்கி வாசகர்களுக்குள்ள ஈடுபாட்டை இந்தப் போட்டியில் அவர்கள் திரளாகக் கலந்து கொண்டதிலிருந்து அறிய முடிந்தது. பாரதி கவிதைவரிகளைச் சரியாகத் தேர்ந்தெடுத்த வாசகர்களின் எண்ணிக்கையோ ஏராளம். தொடர்ந்து நாலைந்து வாரங்களுக்குச் சரியான விடை எழுதிய வாசகர்களின் பட்டியல் தொடரும். இந்த வாரத்திய பட்டியல் இதோ:

**சரியான விடை எழுதியவர்களின் விலாசம்:**

1. எச். பிரேமா, தர்மபுரி: 2. ச. சங்கர நாராயணன், சென்னை-4: 3. ஆர். ரவிச் சந்திரன், தஞ்சாவூர்-9: 4. என். சுப்பு கிருஷ்ணன், ஈரோடு-7: 5. ஆர். விஜயலக்ஷ்மி, சென்னை-15: 6. இ. அ. ரவிகுமார், சென்னை-43: 7. கொ. வெங்கடசாமி, காசி பாளையம்: 8. எம். டி. ஜெயபாலன், செய்யாறு: 9. வி. ரங்கநாதன், கதிரிமங்கலம்: 10. கே. என். மீரா, சென்னை-23: 11. கே. சுந்தரம், திருவனந்தபுரம்; 12. எஸ். சாந்தலக்ஷ்மி, பழங்காநத்தம் 13. பி. புவனேசுவரி, சென்னை-4; 14. ஜே. பி. ராஜேந்திர சேரன், தொப்பம்பட்டி பிரிவு; 15. எல். கே. விஜய், விருகம்பாக்கம், சென்னை-92 16. ஆர். காயத்ரி, சேலம்-1; 17. வி. குமார லிங்கம், பி.என்.புதூர் 18. பன்னீர்செல்வம், வேலூர், சேலம்; 19. என். சீதாலட்சுமி, வளவனூர்; 20. ந. அன்பழகன், புதுக்கடை, குமரி; 21. கை. திருநாவுக்கரசு, வன்னிவேலம்பட்டி; 22. எம். ஆர். ஜெயலலிதா, மதுரை-14; 23. சுஜி. மோகன ராஜா, ஆவராம்பாளையம்; 24. தி. வேங்கடகிருஷ்ண அய்யங்கார், விருதுநகர்; 25. கே. ஏ. சாந்தி, மதுரை; 26. எம். வெங்கடாசலம், ஓடையாக்கவுண்டன் பாளையம்; 27. ஆர். புவனேசுவரி, மயிலம்; 28. விஸ்வா நல்ல முகைதீன், ஆழ்வார்குறிச்சி; 29. அ. செல்வராஜ், தேவகோட்டை; 30. எஸ். லக்ஷ்மி குமாரி, பாண்டிச்சேரி; 31. புலவர் எம். ஏ. தேவராசன், ஊத்துக்கோட்டை; 32. துளசி இராமன், பள்ளிப்பட்டு: 33. டி. எஸ். எஸ். ராகவன், சின்னகாஞ்சீபுரம்; 34. துரை ராமச்சந்திரன், கரூர்; 35. ஆர். சுந்தரம், வடலூர்: 36. இரா. காந்தி, மணிமுத்தாறு; 37. பி. வெள்ளைச்சாமி, மதுரை-10; 38. விஜயா நாராயணன், சென்னை-10; 39. ஆர். லட்சுமி, சிவகங்கை; 40. ஆர். செல்லம், சிவகெங்கை; 41. இரா. கமலம், கரூர்-2; 42. கோ. ரேணுகாதேவி, சென்னை-16; 43. கௌசல்யா, உசிலம்பட்டி; 44. வி. பட்டாபிராமன், சென்னை-61; 45. ஆர். ரேவதி, கடலூர் 46. என். பி. கலைச்செல்வி, சென்னை-84; 47. கே. என். மாலினி சென்னை-1; 48. எஸ். முத்துலட்சுமி, மதுரை-16; 49. எஸ். சாரதா, சென்னை-5; 50 டி. ஆர். பாலசுப்பிரமணியம், மயிலாடுதுறை; 51. கோ. இராம்குமார், பெருங்கட்டூர்; 52. வி. ராஜேசுவரி, சென்னை-17: 53. அ. பாவேந்தன், உடையார்குடி; 54. உமாராணி பாலகுமார், கரந்தை; 55. எஸ். ராகவேந்திரன், ஈரோடு-1; 56. பிரேமா மாணிக்கராஜ், வடக்கன்குளம்; 57. வி. உஷா, சென்னை-61; 58. மா. மணிரோஜா, வடக்கன்குளம்; 59. மீ.குமார், சென்னை-61; 60. ச. கணேஷ், சென்னை-600107; 61. வி. கு. ஏகாம்பரம், தக்கோலம்; 62. இல. கல்யாணராமன், கோயமுத்தூர்; 63. ஜே. ஏ. எல். கணேசன், சென்னை-35; 64. சி. சுரேஷ், சென்னை-43; 65. எஸ். ராமகிருஷ்ணன், சென்னை-43; 66. நாகலூர் நாகசுந்தரம், புதுவை-3; 67. அசோக்குமார், சென்னை-86; 68. ஐ. சுடர், மதுரை; 69. பா. பிரகாஷ், திருநெல்வேலி-2; 70. இல. பங்கயம், பண்ணுருட்டி; 71. கோ. ஆதிநாதன், சென்னை-91; 72. கு. சுசீலா, பழனி; 73. ஆர். முரளி, சென்னை-61; 74. என். பாலன், புதுக்கோட்டை; 75. டி. ஆர். பானு, சென்னை-33; 76. நித்ய ஐராவதி, தர்மபுரி-5; 77. என். ரேவதி, சென்னை-87; 78. பானுமதி நாராயணன், சென்னை-86; 79. ஸ்ரீமதி சாரதா ரங்கசாமி, அகமதாபாத்; 80. கே. சீனிவாசன், பூனா; 81. ஜி. விஜயலக்ஷ்மி, மதுரை-3; 82. ஸ்ரீமதி பி.எஸ். லக்ஷ்மிகாந்தம், சென்னை-13; 83. ஸ்ரீமதி பி. எஸ். அனுராதா, சென்னை-32; 84. ஜெயம்மா, சென்னை-6—; 85. எம். சாரதா, கோயமுத்தூர்-1 (முழு விலாசம் தேவை); 86. கோகிலாராணி, மதுரை-3; 87. நிருநீலகண்டன், பாளையங்கோட்டை; 88. வி. ச. கிருஷ்ணரத்தினம், காட்டாங்குளத்தூர்; 89. ஹேமமாலினி, கொடுமுடி; 90. ஞா. கிரிதரன், நசரேத்பேட்டை; 91. ஜி. பாலகிருஷ்ணன், விழுப்புரம்; 92. எஸ். ரவிராஜன், இருச்சி-2; 93. எஸ்.பி. ஆனந்தன், திருச்சி-8; 94. அகிலா சங்கரி, தென்கரை, பெரியகுளம்; 95. ஆர். சாந்தா, சென்னை-15; 96. ஆர். நாகுபாய், கோயமுத்தூர்20; 97. மா. மணிமாறன், ஆரல்வாய்மொழி; 98. வீ. சுப்பிரமணியன், சென்னை-17; 99. பா. காயத்ரி, சென்னை-34; 100. ஆர். கமலா, சிவகெங்கை

(இன்னும் வரும்)

# இளமையில் முதுமை ஏன்?

## புத்துணர்ச்சி அளிக்கும் காயகல்பம்!

இளைஞர்கள், யுவதிகள், நடுத்தர வயதினர், முதியோர் ஆகிய அனைவரும் உண்டு உற்சாகம் பெறத் தக்க **காயகல்பம்** என்ற சமய சஞ்சீவியைப் பிரபல டாக்டர் **இ. ஷாஹுல் ஹமீது (கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ஸ், 55, ஹாரிஸ் ரோடு, சென்னை-2)** தயாரித்து வெளியிட்டுள்ளார்.

### சித்தர்களின் கண்டுபிடிப்பு

பண்டைய சித்தர்களின் அரிய கண்டுபிடிப்புக்களை விஞ்ஞான பூர்வமாக ஆராய்ந்து தேர்ந்தெடுக்கப்பட்ட கற்ப மூலிகைகளைக் கொண்டு உருவாக்கப்பட்டது இந்தக் காயகல்பம். தங்கம், வெள்ளி, இரும்பு முதலிய நவலோக பற்பங்கள் நவீன முறையில் வீரியப்படுத்தப்பட்டு இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

### அனைவருக்கும் ஏற்றது

இளம் பருவத்தினர் முதல் முதியோர் வரை ஆண்கள், பெண்கள், ஆகிய இருவரும் உட்கொண்டு பயன் அடையத் தக்க வகையில் இந்தக் காயகல்பம் உருவாக்கப்பட்டிருக்கிறது. அடிக்கடி தடிமன் பிடித்தல், உடல் சோர்வு, மனத் தளர்ச்சி, முதலிய பலவீன நிலைமைகளை உடனடியாக நிவர்த்திக்கிறது. மனத்திற்கு மகிழ்ச்சியையும், உற்சாகத்தையும் தெம்பையும் ஊட்டுகிறது.

### மலர்ந்தும் மலராத மங்கையர்கள்

வயதுக்கு வந்தும் பூரணமாக உடல் வளர்ச்சியும் மன எழுச்சியும் அடையாத இளமங்கையர்களுக்கும், அலுத்துச் சலித்த பெண்களுக்கும் இதயத் தீயில் வெந்து நொந்த வனிதையர்களுக்கும் வாழ்க்கையில் புதுப் பொலிவும், வலிவும் கொடுக்கிறது. மாதவிடாய்க் கோளாறுகளை ஒழுங்கு படுத்தி, 'வெள்ளைப்பாடு' என்ற விசனத்திலிருந்து விடுதலை அளித்து உடல் சோர்வையும், தளர்ச்சியையும் நீக்குகிறது இந்த காயகல்பம்.

### இளமையில் முதுமை

அறியாமையின் காரணமாகவும், சூழ்நிலையின் கைதியாகவும், ஜீவசக்தியை அதிகமாகவும், அடிக்கடியும் பாழ்படுத்திக் கொண்டவர்களுக்கு இளநரையும், முடி உதிர்வும் ஏற்பட்டு, இளமையில் முதுமை தோன்றி விடுகிறது. குழி விழுந்த கண்களும், களை இழந்த தோற்றமும் ''பிஞ்சிலே பழுத்தவர்கள்'' என்பதை அடையாளம் காட்டுகின்றன. ''எதிர்காலம் இருண்டுவிடுமோ'' என்று அஞ்சி நடுங்கியவர்களாக இத்தகையவர்கள் ஒவ்வொரு கணமும் நரக வேதனை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள்!

### நடுத்தர வயதினர்

வாழ்க்கையை முழுமையாக அனுபவிக்க நடுத்தர வயதினர் துடித்துக் கொண்டிருக்கிறார்கள்! ஆனாலும் மனத்தோடு ஈடு கொடுக்க உடம்பும், உறுப்புகளும் மறுத்து விடுகின்றன. ஆகவே, மனம் சோர்ந்து ஒய்ந்து விடுகிறார்கள். இத்தகைய நடுத்தர வயதினருக்கும், வசந்த காலம் கசந்து விட்ட இளைஞர்களுக்கும் இந்த காய கல்பம் ஒரு கைகண்ட மருந்து.

### கண்ணதாசன் பாராட்டு

காயகல்பத்தை உண்டு அனுபவித்த கவியரசு கண்ணதாசன், ''காயகல்பத்தைச் சாப்பிட்டு விட்டால் புதிய புதிய சிந்தனைகள் வருகின்றன. உடம்புக்கு வருவதற்கு முன்னால் மனத்திற்கு இளமை வந்து விடுகிறது. பயன்படுத்திப் பார்த்துவிட்டுச் சொல்கிறேன் என் மனைவி காயகல்பத்தைச் சாப்பிட்டுவிட்டு கவிதை எழுதவே ஆரம்பித்து விட்டாள்'' என்று 26-6-80 தேதியிட்ட குமுதம் ''இந்த வாரம் சந்தித்தேன்'' பகுதியில் பாராட்டியிருக்கிறார்.

### ஹெர்பல் மசாஜ் க்ரீம்

காயகல்பத்தோடு, வெளிப் பூச்சாகப்பயன்படுத்த ''ஹெர்பல் மசாஜ் க்ரீம்'' என்ற மூலிகை தேய்ப்பு க்ரீமையும் தயாரித்து வெளியிட்டு இருக்கிறார் டாக்டர் இ. ஷாஹுல் ஹமீது மசாஜ் க்ரீமை நாமே தேய்த்துக் கொள்ளலாம். பிறரைக்கொண்டும் மசாஜும் செய்து கொள்ளலாம். தொடர்ந்து தேய்த்தால் வளர்ச்சி குன்றிய அங்கம் வளர்ச்சி யடைகிறது. தளர்ச்சி நீங்குகிறது. தளர்ந்த உறுப்புகளும், தசைகளும் உரமேறுகின்றன. உடல் வலியும் தசைவலியும் மறைகின்றன. ஊளைச் சதையும் குறைகிறது.

# முடி வளர்க்கும் மூலிகை மருந்துகள்!

## இள நரை

முடி வளர்ச்சிக்கான மூலிகை மருந்துகளையும் மிக நவீன முறையில் தயாரித்து வெளியிட்டிருக்கிறார் டாக்டர் **ஷாஹுல் ஹமீது.** முடி உதிர்ந்து கொட்டுவதை நிறுத்தவும், இள நரையை மாற்றவும் ஹெர்பல் ஹேர் க்ரீம் பயன்படுகிறது. மூளைக்கு குளிர்ச்சியையும், மனத்திற்கு மகிழ்ச்சியையும் அளிக்கிறது. நீண்ட முடியை உடைய பெண்களுக்கு ஏற்ற வகையில் தூய தேங்காய் எண்ணெயில் முடி வளர்க்கும் மூலிகை சத்துக்கள் அடங்கிய கூந்தல் தைலமாக **ஹெர்பல் ஹேர் டானிக்** தயாரிக்கப்படுகிறது. முடி உதிர்தலை நிறுத்தி கூந்தலைக் கருகருவென்று அடர்த்தியாக வளரச் செய்யும்.

## குற்றால அருவியின் குளுமை

முழுக்க முழுக்க மூலிகைச் சத்துக்கள் அடங்கிய நவீன மூலிகை ஷாம்பூ ஹெர்பல் ஹேர் கேர். குற்றாலத்தில் குளித்தது போன்ற குளுமை உணர்வையும் சுகந்த மணத்தையும் கொடுக்கக் கூடியது. தலையில் உள்ள பொடுகு, பேன், ஈறுகளைப் போக்கி கேசத்தைப் பட்டுப் போல் மென்மையாகச் செய்கிறது. முடி உதிராமலும் இள நரை வராமலும் தடுக்கிறது.

## முக வசீகரம்

முகம் வசீகரமாக இருக்க வேண்டும் என்று விரும்புவது மனித இயற்கை. முகத்தின் அழகைக் கெடுப்பதும் கவர்ச்சியைக் குறைப்பதும் முகப் பருக்களே! அடிக்கடி முகப்பருக்கள் ஏற்படுவதால் முகத்தின் சருமம் தடித்து சொர சொரப்பாக ஆகிவிடுகிறது. இதற்குச் சித்த மருத்துவத்தில் சிறப்பான மருந்துகள் இருக்கின்றன.

## பிம்ப்ளக்ஸ்

முக வசீகரத்துக்கான இந்த மூலிகை மருந்துகளை ஆராய்ந்து தேர்ந்தெடுத்து **'பிம்ப்ளக்ஸ்'** என்ற பெயரில் நறுமணம் கமழும் முகப் பரு நிவாரணியாக உருவாக்கி இருக்கிறார் டாக்டர் **இ. ஷாஹுல் ஹமீது.** முகப் பருக்களையும், மங்கும், தேமல், சருமத் தடிப்பு முதலிய கோளாறுகளை 'பிம்ப்ளக்ஸ்' அடியோடு நீக்குகிறது. மேலும், முக ஒப்பனைக்கு அடிப்படையாகவும் இதைப் பயன்படுத்தலாம். ஆண்கள் முகமழித்தலுக்குப் பிறகும் இதை உபயோகிக்கலாம்.

## முத்துப்பற்கள்

முக வசீகரத்துக்கு மூல காரணம் முத்துப் பற்கள். தேக ஆரோக்கியத்திற்கும் பற்களே அடிப்படை. பல்லை இழந்தவன் சொல்லையும் இழந்தான். சுகத்தையும் இழந்தான் என்று சொல்வதுண்டு. ஆகவே நம் முன்னோர்கள் பற்களின் பாதுகாப்புக்கு முதலிடம் தந்தனர்.

## மூலிகைப் பற்பொடி

சித்த மருத்துவத்தில், சொல்லப்பட்ட மூலிகைகளைக் கொண்டு ஹெர்பல் டூத் பவுடர் தயாரிக்கப் பட்டிருக்கிறது. இந்தப் பற்பொடியின் தயாரிப்பு முறையிலும் டாக்டர் **ஷாஹுல் ஹமீது** கையாளும் தனி பாணி சிறப்பாக அமைந்திருக்கிறது. தூய வெண்மை நிறத்தோடு நுரை வளம் கொண்டது இந்தப்பற்பொடி. பலவிதமான பல் நோய்கள் வராமல் தடுக்கவும், வந்த பின் விரைந்து போக்கவும் இது உதவுகிறது.

## சுற்றுலாப் பொருட்காட்சி

சென்னைத் தீவுத் திடலில் நடைபெறும் அகில இந்தியச் சுற்றுலாப் பொருட்காட்சியில் கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ட்ஸ் அரங்கு அமைந்துள்ளது. தினமும் ஆயிரக் கணக்கானோர் அங்கு வருகை தந்து, தகுதிவாய்ந்த பரிசுகளைப் பெற்று மகிழ்ச்சி அடைகிறார்கள்.

## இலவச மருத்துவ ஆலோசனை

இந்தத் தகவல்களை டாக்டர் **இ. ஷாஹுல் ஹமீது** தெரிவித்தார். சென்னை எழும்பூர் மெட்ரோ பாலிடன் மாஜிஸ்டிரேட் கோர்ட்டுக்கு எதிரில் அமைந்துள்ள கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ஸ் அலுவலகத்தில் பிரதி தினம் காலை 10 மணி முதல் பிற்பகல் 1 மணி வரை டாக்டர் இ. ஷாஹுல் ஹமீது அவர்களைச் சந்தித்து இலவச மருத்துவ ஆலோசனை பெறலாம்.

**கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ஸ்** தற்போது தமிழக மெங்கும் எல்லாக் கடைகளிலும் கிடைக்கின்றன.

**தமிழக விநியோகஸ்தர்கள்**

**M/s. கிரௌன் பார்மசூடிகல் ஏஜென்சீஸ்,**

**55, ஹாரிஸ் ரோடு, சென்னை-600 002**

**( எழும்பூர், மெட்ரோபாலிட்டன் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டுக்கு எதிரில் )**

ADVT

# தேவை ஒன்றே ஒன்று!




✱ 'இதோ சதம் போடப் போகிறோம்! நாளைப் பத்திரிகைகளில் நம் படமும் பாராட்டும் வரும்' என்று நினைக்கின்ற கட்டத்தில் தொண்ணூற்றி எட்டு, தொண்ணூற்றி ஒன்பது ஓட்டங்கள் எடுத்த நிலையில் எத்தனை பேர் அவுட் ஆகிவிடுகிறார்கள்! அவர்கள் மனநிலை எப்படி இருக்கும்?

1901—1902ல் ஆஸ்திரேலிய வேனிற் காலம். இங்கிலாந்திலிருந்து வந்திருந்த ஆர்ச்சி மெக்லாரன் கோஷ்டியுடன் ஆஸ்திரேலியா கோஷ்டி இரண்டாவது டெஸ்ட் பந்தயத்தைத் துவங்கி இருந்தது. அதில் ஆடிய இடது கை மட்டையடிக்காரரான கிளெம் ஹில் தொண்ணூற்றி ஒன்பது ஓட்டங்கள் எடுத்திருந்த நிலையில் அவுட் ஆகிவிட்டார்!

இருபத்தி ஐந்து வயதான அவர் பிறந்த ஆண்டிலிருந்துதான் கிரிக்கெட் டெஸ்ட் பந்தயங்களே தோன்றியிருந்தன. மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டார். அடுத்த டெஸ்ட் பந்தயத்தில் அதிருஷ்டம் அடிக்கும் என நம்பினார்.

அடுத்த டெஸ்ட் பந்தயம் அடிலெய்ட் நகரில் நடந்தது. கிளெம் ஹில் ஆடினார். முதல் இன்னிங்ஸில் தொண்ணூற்று எட்டு ஓட்டங்கள் எடுத்திருந்தபோது அவுட் ஆனார். இரண்டாவது இன்னிங்ஸில் தொண்ணூற்றி ஏழிலே அவுட் ஆனார்.

தொண்ணூற்றி ஒன்பது ஓட்டங்கள் எடுத்த நிலையில் அவுட் ஆகும் ஆட்டக்காரர்கள் பட்டியலை ஆரம்பித்து வைத்தவரே கிளெம் ஹில்தான்.

அவர் வழியைப் பின்பற்றியவர்கள் பல பிரபல ஆட்டக்காரர்கள்! இதோ சில உதாரணங்கள்:

1954—55ம் ஆண்டு இந்தியா— பாகிஸ்தான் அணிகளுக்கு இடையே லாகூரில் மூன்றாவது டெஸ்ட் பந்தயம். பாகிஸ்தானிய ஆட்டக்காரர் மக்ஸூட் அஹமத் தொண்ணூற்றி ஒன்பது எடுத்திருக்கையில் 'ஸ்டம்ப்' செய்யப்பட்டு அவுட் ஆனார்.

1958—59ம் ஆண்டு இந்தியா— மேற்கிந்திய அணிகளிடையே மோதல். சென்னையில் நாலாவது டெஸ்ட். மேற்கிந்திய ரோஹன் கன்ஹாய் 99ல் ரன் அவுட்.

1959—60ல் ஆஸ்திரேலியா — இந்தியா மோதல். டில்லியில் நடந்த டெஸ்ட் பந்தயத்தில் இரண்டாவது இன்னிங்ஸில், துவக்க ஆட்டக்காரர் பங்கஜராய் 99ல் ரன் அவுட்.

1961—62ல் பாகிஸ்தான் குழு பாரதத்துக்கு வந்தபோது கான்பூர் டெஸ்ட்டில் எம். எல். ஜெயசிம்மா 99ல் ரன் அவுட் ஆனார்.

நூறு எடுத்துப் பெருமைப்படும் நிலையை விட 99ல் ஆட்டம் இழந்து திரும்பும் நிலை ரசிகர்களிடையே பாராட்டுதலை மட்டுமின்றி அனுதாபத்தையும் பெற்றுத் தருகிறது.

—பட்டினத்தார்

---



பிரபல ஹிந்தி நடிகர், தயாரிப்பாளர், மற்றும் டைரக்டரான வி. சாந்தாராம் தாம் தயாரிக்கும் ஒவ்வொரு படத்திலும் ஒரு சமூகப் பிரச்னை பற்றிச் சொல்வதுண்டு.

தோ ஆங்கேன் பாரா ஹாத் (கைதிகள் சீரமைப்பு)
தர்மாத்மா (தீண்டாமை)
சாந்த் ஏக்நாத் (ஜாதி வெறி)
குங்கு (பெண்களின் முன்னேற்றம்)
படோசி (இந்து முஸ்லிம் ஒற்றுமை)
மௌனி (பிராணி வதைத் தடுப்பு)
டூஃபான் அவுர் தியா (குழந்தைகளின் பிரச்னைகள்)
சுபா கா தாரா (விதவைத் திருமணம்)
தீன் பத்தி சார் ரஸ்தா (தேசிய ஒருமைப்பாடு)
தாஹேஜ் (வரதட்சிணைக் கொடுமை)

வேறு எந்தத் தயாரிப்பாளருக்கும் இத்தனை பெருமை கிடையாது!

கரண்ட் — ரமேஷ்

# "மாணவர்களுக்குத் துரோகம் செய்யாதீர்கள்!"

**"கலைக் கல்லூரிகளில் நடக்கும் பாட போதனையால் சமுதாயத்துக்கு என்ன நன்மை' என்ற அர்த்தத்தில் பேசியுள்ளார் முதல்வர். கலைக்கல்லூரிகள் திறக்க இனி அனுமதிகிடைக்காது என்பது போல் கல்வி அமைச்சரும், பேசியுள்ளார். இது தொடர்பாக, கிறிஸ்தவக் கல்லூரி முதல்வர் டாக்டர் மித்ரா ஜி. அகஸ்தின் அவர்களைக் கேட்டபோது....**

நிருபர்: இன்றைய கல்வி முறைக்கும் வேலை வாய்ப்புக்கும் குறைந்த தொடர்பே இருக்கிறது என்று தமிழக முதல்வர் கூறியுள்ளாரே?

முதல்வர்: வேலை கொடுக்கும் அரசு, பொதுத் துறை நிறுவனங்கள், தனியார் துறை நிறுவனங்கள் எல்லாமே, ஒரு பட்டம் பெற்றிருக்க வேண்டும் என்று கேட்டுத் தானே ஆட்களைத் தேர்ந்தெடுப்பதற்கு விளம்பரம் செய்கிறார்கள். அதனால்தானே கல்லூரிகளில் பட்டம் பெறத் துடிக்கும் மாணவர்களின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டே போகிறது? முதலில் இந்த நிறுவனங்கள், மற்றும் அரசாங்கம், எந்த மாதிரியான கல்விப் பயிற்சி பெற்ற ஆட்கள் தமக்கு வேலைக்கு வேண்டும் என்ற கொள்கையை நிர்ணயித்துக்கொள்ளட்டும். அதற்கு அப்புறம் அதற்கேற்ற படி நிலை மாறும். எடுத்ததற்கெல்லாம் பட்டம் பெற்றிருக்க வேண்டும் என்ற நிலை இருக்கும்வரை கல்லூரிகளில் பட்டம் பெற நினைப்பவர்கள் எண்ணிக்கைஉயர்ந்து கொண்டுதான் இருக்கும். இன்றையச் சூழ்நிலையில் வேலை வாய்ப்புக்குத் தகுந்த கல்வியை அளிக்கவில்லையானால் அது நமது மாணவர்களுக்கு நாம் இழைக்கும் பெரிய துரோகமாகும்.

நிருபர்: சமுதாயத்தின் தேவைக்கும், இன்றைய கல்வி முறைக்கும் தொடர்பு இல்லை என்று கூறப்படுகிறதே?

முதல்வர்: சமுதாயத்தின் தேவைக்கேற்ப பல்கலைக் கழகம் பாடத் திட்டங்களை மாற்றட்டும். யார் தடுக்கிறார்கள்? எங்கள் கல்லூரி சுய சார்பு பெற்ற கல்லூரியாக இருப்பதால் இன்றைய சூழ்நிலைக்கு ஏற்ப சில பாடத் திட்டங்களை நாங்கள் வகுத்துக்கொள்ள முடிகிறது. பாடத் திட்டங்களில் குறைந்தபட்சம் 25 சதவிதமாவது சமுதாயத்துடன் சம்பந்தப் பட்டதாக இருக்க வேண்டும். கடந்த இரண்டு மூன்று ஆண்டுகளாக இதற்கான முயற்சிகளை பல்கலைக் கழகம் எடுத்து வருகிறது. ஆனால் இதுவரை எந்த முடிவும் எடுக்கவில்லை. முக்கிய பாடத்துக்குத் துணைப் பாடமாக இருக்க, இப்பொழுது கொடுக்கப் பட்டிருக்கும் சப்ஜெக்ட்டுகளை விட அதிகம் கொடுக்க வேண்டும். அவையும் சமுதாயம் சம்பந்தப்பட்டதாக இருக்கவேண்டும்.

இரண்டாவதாக நமது கல்லூரிகளில் நாம் கற்றுத் தருவது எல்லா சப்ஜெக்ட்டுகளைப் பற்றிய அடிப்படையான விஷயங்களைத்தான். எட்டாவது படித்தவன், ஒரு அணு சக்தி விஞ்ஞானியாக ஆக முடியாது. அதற்கு பி.எஸ்.ஸி, எம்.எஸ்ஸி படித்து ஆராய்ச்சி செய்ய வேண்டும். எனவே அவன் கல்லூரியில் படித்துத் தான் இருக்க வேண்டும். இன்றைய சமுதாயத்துக்கு அணு சக்தியின் தேவை எவ்வளவு என்பது உங்களுக்குத் தெரியும். ஆக சமுதாயத்தின்வளர்ச்சிக்குத் தொழில் கல்லூரி தவிர இதர கல்லூரிகளின் சேவையும் நிச்சயம் தேவைதான்.

கல்லூரியில் படிக்கும் மாணவன் பாடங்களின் மூலம் அறிவைப் பெறுவது மட்டுமல்லாமல் சக மாணவர்களுடன் பழகுவது, சுற்றுலாச் செல்வது போன்ற விஷயங்கள் மூலம் வாழ்க்கையில் சில விஷயங்களை எப்படிச் சமாளிப்பது என்பதையும் கற்றுக் கொள்கிறான்.

நிருபர்: இன்றைய சூழ்நிலைகளுக்குத் தொழிற் பயிற்சியுடன் கூடிய கல்வி முறைதான் ஏற்றது என்பது பற்றி...?

முதல்வர்: இந்தத் தொழில் பயிற்சியுடன் கூடிய கல்வி முறையை விரிவு படுத்து



✱ டாக்டர் மித்ரா அகஸ்டின்

வதற்கு முன்பு, மேல் நிலை பள்ளிகளில் ஐந்து வருடங்களுக்கு முன் அமுல்படுத்தப் பட்ட தொழிற் பயிற்சியுடன் கூடிய கல்வி முறையில் படித்து முடித்த மாணவர்கள் இப்போது என்ன செய்கிறார்கள் என்பதை அரசு கணக்கெடுத்துப் பார்க்க வேண்டும். அவர்கள் படித்த அந்தக் கல்வி அவர்களுக்கு வேலை வாய்ப்பைத் தேடித் தந்திருக்கிறதா அல்லது அவர்கள் மேற்கொண்டு பட்டப் படிப்புப் படித்தார்களா போன்ற கேள்விகளுக்கு விடை கண்டுவிட்டு, இந்தத் தொழிற் பயிற்சியுடன் கூடிய கல்வி முறையை விரிவு படுத்தலாம்.

தொழில் கல்வியை நன்கு யோசித்து வெற்றிகரமாக அமல்படுத்த வேண்டும் என்றுதான் கூறுகிறேனே ஒழிய நான் தொழில் கல்வியின் எதிரி அல்ல; அதே நேரத்தில் கலைக் கல்லூரிகள் சமுதாயத்துக்குத் தேவையில்லை என்பதையும் ஒப்புக்கொள்ள மாட்டேன்.

பேட்டி: **ப்ரியன்**



# சில்பிக்கு ஒரு சோதனை!



இரண்டு வருடங்களுக்கு முன்னால் ஒரு ஜனவரி மாதத்து நடுப்பகல் நேரம். நான் ஒரு மருந்து வாங்க வெளியே போய்விட்டு வீடு திரும்பிய போது ''உங்களைத் தேடிக் கொண்டு ஒருவர் வந்திருக்கிறார். உங்களைப் பார்த்து விட்டுத்தான் போவேன் என்று உள்ளே உட்கார்ந்திருக்கிறார்'' என்று என் மனைவி அறிவிப்புக் கொடுத்தாள்.

கூடத்தில் எட்டிப் பார்த்தேன். நண்பர் சில்பி.

''வாருங்கள்! வாருங்கள்!'' என்று வரவேற்றுவிட்டு ''நீங்க மன்னிக்கணும். உங்களைக் காண, உங்கள் படங்களுடன் வர வேண்டுமென்றுதான் நினைத்துக் கொண்டே இருக்கிறேன். அவகாசம் இல்லை'' என்று சற்று வருத்தத்துடன் சொன்னேன்.

ஒரு பேட்டிக் கட்டுரைக்காக அவர் வரைந்திருந்த சில 'ஒரிஜினல்' ஓவியங்களை அவரிடமிருந்து வாங்கி வந்திருந்தேன். கட்டுரை வெளியாகி விட்டது. வாங்கி வந்த படங்களை நேரில் நானே கொண்டு போய் ஒப்படைக்க வேண்டும் என்ற ஆர்வத்துடன் இருந்தேன். ஆனால் என் தாயார் உடல்நிலை மோசமானதால் அவளைக் கவனிக்கவே நேரம் சரியாக இருந்தது.

சில்பியிடம் இந்தத் தகவலைச் சொன்னவுடன் அவர் உணர்ச்சி வசப்பட்டார். ''இந்தப் பணிதான் புனிதமானது... உங்களுக்குத் தெரியாது. என் தாயார் என்னை அவள் கடைசிக் காலத்தில் ஒரு பெரிய சோதனைக்குள்ளாக்கினாள். அதில் அவள்தான் ஜெயித்தாள்'' என்று நிறுத்தினார்.

அவர் தொடர்ந்து சொல்லுவார் என்ற நம்பிக்கையில் நான் மௌனமாயிருந்தேன்.

''வயோதிகக் காலத்திலே என் தாயாரை என் வீட்டில் வைத்துக் கவனித்துக்கொள்ளப் பெண் துணை இல்லை. எனக்குத் தொழில் காரணமாக அடிக்கடி வெளியூர் போகவேண்டியிருந்தது.... என் சகோதரன் வீட்டில் அவளைக் கொண்டு போய் விட்டிருந்தேன்.

''ஒரிரண்டு மாதங்கள் எங்கெல்லாமோ போய்விட்டுத் திரும்பி என் சகோதரன் வீட்டில் அவளைப் பார்க்கப் போனேன். அப்போது அவள் பார்வை முழுவதுமாக மறைந்திருந்ததைப் புரிந்து கொண்டேன். எங்கோ பார்த்துப் பேசத் தொடங்கினாள். வேதனை நிறைந்த குரல்.

''அம்மா!... கண்களுக்கு மருந்தே போட்டுக் கொள்ளவில்லையா? டாக்டர் என்ன சொன்னார்?'' என்று பதற்றத்துடன் நான் கேட்ட கேள்விகளுக்கு அவளிடமிருந்து பதில் வரவில்லை. அதற்குப் பதிலாக ''இங்கே என்கிட்டே வந்து உட்காரு. உன் மடியில் தலை வைத்துச் சற்றுப் படுத்துக் கொள்ள வேண்டும்'' என்று மாத்திரம் சொன்னாள்.

நான் அப்படியே செய்தேன்.

''இப்போ மணி எவ்வளவு?''

மணியைச் சொன்னேன்.

''இதோ பாரு! இன்னும் கரெக்டா ஒரு மணி நேரத்துலே உங்க அம்மா மூச்சு அடங்கணும்னு பகவானைப் பிரார்த்தனை பண்ணு. அதுதான் என் கடைசி ஆசை'' என்றாள். அவள் வார்த்தைகளில் உடல் வேதனைகளிலிருந்து விடுதலை பெற விரும்பும் தாபம்.

நான் பதறிப் போனேன். ''என்னம்மா! ஒரு பிள்ளை செய்யற காரியமா இது? என்னை ஏன் இப்படிச் சோதிக்கிறே!''.

''நீ தெய்வ நம்பிக்கை உள்ளவனாக இருந்தால் நான் சொல்வதைச் செய்'' என்று சொல்லிக் கண்களை மூடிக் கொண்டாள்.

''ஆண்டவனே! என் தாயைக் காப்பாற்று' என்று வேண்டிக் கொண்டால் அவள் கட்டளையை மீறுவது ஆகும். ''ஆண்டவனே! என் தாய் இன்னும் ஒரு மணி நேரத்துக்குள் ஒடுங்கி அடங்க வேண்டும்'' என்று தியானித்தால் அது மாத்ரு பக்தியாகுமா? நான் தவித்தேன். கண்ணீர் விட்டேன்.

அவள் கட்டளையை என்னால் மீற முடியவில்லை.

அவளுக்கு மணி சொல்லி ஐம்பத்தி எட்டு நிமிஷங்களாயின. அவள் முகத்தைப் பார்த்தேன். அந்தக் கணத்தில் அவள் தலை சரிந்து விட்டது. அவள் வெற்றி பெற்றுவிட்டாள்!''

நண்பர் சில்பி அவருடைய ஓவியங்களைப் பெற்றுக் கொண்டு எழுந்திருந்தார்.

-கோமதி ஸ்வாமிநாதன்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy. Madras-600 032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani

Editor: K. Rajendran

புலரும் இன்றைய
என் பொழுது
மகிழ்வாய்
மலருமே

பொங்கும்
மகிழ்வைக் கூட்டுமே
**ம:.பத்லால்
துணிகள்**
மட்டுமே

ம:.பத்லால் துணிமணிகள்
மென்மையானவை. உடலுக்கு இனிய
உணர்வைத் தருபவை. பாலியெஸ்டர்
பாலியெஸ்டர் ப்ளெண்ட்ஸ் மற்றும்
காட்டன் துணிகளில் நித்தம்
நித்தம் புத்தம் புதிய படைப்புகள்.
அவற்றின் வண்ணங்கள்,
கொசுவுகள், மற்றும் வடிவமைப்புகள்
அனைத்தும் காணும் பொழுதும்
கற்பனையூட்டி உங்கள் அழகுக்கு
அழகூட்டுகின்றன.

**ம:.பத்லால்
:.பேப்ரிக்ஸ்**

